போங்கும் மங்களம் எங்குந் தங்குக

# தமிழ்ப்
# புலவர் சரித்திரம்

சென்னைக் கிறிஸ்தவக் கலாசாலைத்
தலைமைத் தமிழ்ப் பண்டிதராயிருந்த
**வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் பி.ஏ.,**
இயற்றியது.

அண்ணமலைச் சர்வ கலாசாலைத்
தமிழ்ப் பண்டிதர்
**ந. பலராம ஐயர்**
எழுதிய குறிப்பும் முகவுரையுங் கொண்டது



மதுரை
**வி. கு. சுவாமிநாதன்**
வெளியிட்டது

# முகவுரை

ஆசிரியர் ஒரோவோர் காலத்தில் மாதாந்த பத்திரிகைகளிலும், தாம் பதிப்பித்த சில நூல்களின் முகவுரைகளிலும் எழுதியுள்ள ஒரு சில தமிழ்ப் புலவர்களின் சரிதைகளையொரு சேரத் தொகுத்துத் தனிப் புத்தகமாக வெளியிட்டால் தமிழ்பயிலும் இளைஞர்க்குப் பயன்படுமென்று கருதி, ஆசிரியர்தம் குமாரராகிய ஸ்ரீ வி. சூ. சுவாமிநாதன் அவர்கள் அவற்றைத் திரட்டித் 'தமிழ்ப் புலவர் சரித்திரம்' எனப் பெயர் தந்து இந்நூலைப் பிரசுரித்துள்ளார். பல வாண்டுகளுக்கு முன்னர்த் தமக்குக் கிடைத்த சில ஆதாரங்களைக் கொண்டு ஆசிரியர் வரைந்த இவ்வரலாறுகளிற் கண்ட கால வரையறை முதலிய சில விடயங்களுக்கும், அவர் காலத்தின் பின்னர் வெளிப்பட்ட பல சாசன முதலியவற்றின் துணையானெழுந்த ஆராய்ச்சிகளினாற் போந்த விவரங்களுக்கும் மாறுபாடுகள் காணப்படுதல் வியப்பன்று. இப்பொழுது ஏற்பட்டுள்ள ஆராய்ச்சிகளின் முடிவுகளும், இனிப் புதிய சான்றுகள் கிடைக்கப்பெறின், அவற்றானெழும் ஆராய்ச்சிகளால் மாறவேண்டி வரும். இவ்வுண்மையானே, முன்னாராய்ச்சிகளைப் பின்னாராய்ச்சிகளின் முடிவுகள் மறுப்பினும் அதனால் அவைகட்கு உளதாவதோர் இழுக் கொருசிறிதுமின்று. மேலும், முன்னாராய்ச்சி முடிவுகளே பின்ன ரொரு ஞான்று தக்க வாதாரம் பெற்று வலியுற்று நிற்றலும் கூடும். ஆகவே முன்னர் எழுந்த ஆராய்ச்சிகளே இனிப் பின்னர் எழும் ஆராய்ச்சியாளர்க்குப் பெருந் துணைக்கருவியாக நிற்றல் ஒருதலையாம்.

இன்னோரன்ன காரணங்களால், இந் நூலினையும் உவப்புடன் தமிழுலகம் ஏற்கும் எனக் கருதியே இது வெளியிடப்பட்டது. இதுவேயுமன்றி, ஆசிரியர்தம் செவ்விய தமிழ் நடை யாவர்க்கும் இன்பமளிக்குமாதலின் இந்நூல் தமிழ் பயிலு மாணவர்க்குச் சிறந்ததொரு வசன நூலாக அமைதலும் பொருந்துவ தொன்றாம்.

ஆசிரியர், தமிழிற்கு முறைப்படவரைந்த தமிழ்ப் புலவர் சரிதமொன்று இல்லாதது பெருங்குறை வென்பதை நன்

குணர்ந்தவராதலின், அக்குறைவினை நீக்குவதெங்ஙனமென்று பல்லாற்றானுஞ் சிந்தித்திருந்த தொருதலை. அதுபற்றியே, அவர் தமது ஞானபோதினிப் பத்திரிகையில், 'தமிழ்ப் புலவர் சரிதம்' என்ற தலைப்பின்கீழ் இத்தகைய நூலொன்றின் இன்றியமையாமையைக் குறித்தோர் வியாசமெழுதியுள்ளனர். அவ்வியாசமும், ஈண்டு வரையப்பெற்றுள்ள ஒரு சில புலவர்தஞ் சரிதங்கட்கு முன் பாயிரமாக நிற்றல் எவ்வாற்றானு மேற்புடைத்தென்று கருதி, இம் முகவுரையின் பின்னர் அச்சிடப்பட்டுள்ளது. அதன்கட் கூறியாங்குச் செந்தமிழ்ப் புலவர்தஞ் சீரிய சரிதமெழுதும் ஆற்றல் படைத்த பெரியார், பண்டுதொட்டு இன்றளவுந்தோன்றிய தலை சிறந்த தமிழ்ப் புலவர் தம் புலமையெல்லாந் திரண்டோ ருருவெடுத்தாற்போல விளங்கும் செந்தமிழ்ப் பேராசிரியர் மகாமகோபாத்தியாய Dr. உ. வே. சாமிநாத ஐயர் அவர்களே யென்பது தேற்றம். இவ்வுண்மையைப் பலவாண்டுகளுக்கு முன்னரே ஆசிரியர் கண்டறிந்தெழுதியது பெரிதும் பாராட்டற்பாலது. செந்தமிழை முன்னேற்றக் கருதி அரும்பெரும் பாடுபடும் செல்வர்கள் பலரும், புலவர் சிந்தாமணியாகிய ஸ்ரீமகாமகோபாத்தியாய ஐயர் அவர்கட்கு உதவித்துணையாக வேறு சில தக்க புலவரை யமைத்துக் கொடுத்து, அன்னார் தம் மனக்குகையுட் பொதிந்துகிடக்கும் பெறலரும் மணிக்குவைகளாகிய தமிழ்ப் புலவர் வரலாறுகளை வெளிப்படுத்த முயல்வராயின், அது தமிழகஞ் செய்த பெருந் தவப் பயனும்.

ஆசிரியர்தம் நூல்கள் பலவற்றையும் தனித் தனியாயும் ஒரு சேரத் தொகுத்தும் குறிப்புரை முதலியவற்றோடு வெளியிடக் கருதி, அன்னார்தங் குமாரர் சிரஞ்சீவி வி. சூ. சுவாமிநாதன் அவர்கள் எடுத்துக்கொண்ட நன்முயற்சி பலவும் இடையூறின்றி இனிது நிறைவேற எல்லாம் வல்ல இறைவன் திருவருள் புரிவாராக.

அண்ணாமலைநகர்,<br>
7—10—1933.

இங்ஙனம்,<br>
ந. பலராம ஐயர்

# * தமிழ்ப் புலவர் சரிதம்

உலகின்கணுள்ள நாகரிக நாடுகளில் வழங்கும் பாஷைகளெல்லாம் நின்னிலேயிலிருக்கின்றன. அவ்வந் நாடுகளின் நாகரிக விருத்திக்கேற்றவாறு ஆங்காங்குப் பயிலுறாஉம் பாஷைகளும் விருத்தியடைந்து ஒளி சிறந்து விளங்குகின்றன. அவ்வப்பாஷைகளின் மகிமையுஞ் சிறப்பும் அவ்வப் பாஷைகள் வல்ல புலவர்களானும் அன்னாரியற்றிய நூற்றொகைகளானும் புலனும். ஆகவே ஒவ்வொரு பாஷையின் சிறப்பையும் விளக்குங் கருவிகளுள் தலை நின்றது அப்பாஷையின் புலவர் சரிதமென்பது துணியப்படும். படவே ஒவ்வொரு பாஷைக்கும் புலவர் சரிதம் வகுக்கப் படுதல் இன்றியமையாத தொன்றும்; எனவே புலவர் சரிதமில்லாமை பாஷைக்கேயொரு குறைவாக மதிக்கப்படுதன் மட்டில் நில்லாமல் அப்பாஷை பயின்றோர்க்கும் பயில்வோர்க்கும் உற்றதோர் பெருங் குறையாகவும் மதிக்கப்படுகின்றது.

இத்தகைய குறைபாடு நமது தமிழ்மொழிக் கண்ணுமுண்டுகொல்? இது விஷயமாக ஆராய்ச்சி செய்த வழித் தோன்றுவனயாவை? ஓராற்றல் உற்று நோக்குமிடத்து இக்குறைபாடு முன்னொரு காலத்திருந்து பின்னர்ச் சிறிது சிறிதாக நீங்கத் தலைப்பட்டு வாரா நின்றது. சில நூற்றாண்டுகட்கு முன்னர் எழுதப்பட்டதாகத் தோன்றுகின்ற 'தமிழ் நாவலர் சரிதை' என்றதோர் நூலுளது. அந்நூல் தமிழ் நாவலர்களுட் சிலருடைய சரித்திரங்களைக் கூறுமுகத்தால் அவ்வந் நாவலர்கள் பற்பல வமயங்களிற் பாடிய செய்யுட்களையும் இடையேயெடுத்துரைக்கின்றது. அஃது ஒருவாறு உய்த்தறியுமிடத்துத் தற்காலத்து வெளிப்பட்டுலவும் 'தனிப்

---

* ஆசிரியர் ஞானபோதினிப் பத்திரிகையில் வரைந்தது.

பாடற்றிரட்டு' என்னும் நூலையும் போலா நின்றது. இன்னின்னபாடல்கள் இன்னின்ன சந்தர்ப்பங்களிற் பாடப்பெற்றனவென்பது குறிக்கப்பட்டிருத்தலின், தனிப்பாடற்றிரட்டினுந் தமிழ் நாவலர் சரிதை மேதக்கதென்பது தேற்றம். தனிப்பாடற்றிரட்டு இத்தமிழ் நாவலர் சரிதையினுதவி கொண்டே தொகுக்கப்பட்டு மிருக்கலாமென்பது தோன்றுகின்றது.

இது நிற்க. யாழ்ப்பாணத்திற் காசி செட்டி யென்பாரொருவர் தமிழ்ப்புலவர் சரிதத்தைத் தொகுத்து ஆங்கில மொழியிலெழுதிப் பல்லாண்டுகட்கு முன்னர் வெளியிட்டனர். அது நூலாராய்ச்சி முறையைத் தழுவி ஒருவாறு எழுதப்பட்டுளது; அது காலக்கிரமப்படி யெழுதப்படாமை கால வரையறை காண்டலரிதாகின்றமை பற்றியே போலும். அதன் கண் நல்லிசைப்புலவர் பலருடைய சரிதங் காணப்படாமை யாற் குன்றக் கூறலென்னுங் குற்றந் தங்குவதாயிற்று. அதன் பின்னர் யாழ்ப்பாணத்து ஆ. சதாசிவம் பிள்ளை யென்பார் 'பாவலர் சரித்திர தீபகம்' என்றதோர் நூலியற்றிப் பிரசுரித்தனர். அது தமிழ்ப்புலவர் பெயர்களை அகராதிக்கிரமப் படுத்தியெழுதியதோர் தமிழ்வசன நூலாம்; இடையிடையே அவ்வப் புலவருடைய பாடல்களும் உதாரணமாகக் காட்டப்பட்டுள. கால நிர்ணய விஷயத்தில் இந்நூல் அதிக திருப்தி கரமானதாயிருக்கவில்லை. இதன்கட் சில அருமையான விஷயங்களும் கூறப்படாமற் போயின.

இனிக் கும்பகோணக் கலாசாலையில் தமிழ்ப் புலமை நடாத்திவரும் மகாவித்துவான் பிரம்மஸ்ரீ உ. வே. சுவாமிநாத ஐயரவர்கள் தாம்பதிப்பித்த சிலப்பதிகாரத்தினும் மணிமேகலையினும் தமிழ் நூல்கள் பலவற்றைப் பற்றிய குறிப்புக்களெழுதி யிருக்கின்றனர். இன்னும் புறநானூற்றினும் நல்லிசைப் புலவர் பலருடைய சரித்திரக் குறிப்புக்களும் அப்புலவர்களை யாதரித்தாரைப் பற்றிய குறிப்புக்களும் வரையப்பட்டுள.

இவையனைத்தையும் ஒருங்கு தொகுத்து இன்னுந் தாம் அருமையாகக் கண்டு குறித்து வைத்துளவிஷயங்களையுங் கூட்டித் தனிநூலாக வெளிப்படுத்தப் போகின்றனரெனக் கேள்வியுற்றுக் களிபேருவகை பூக்கின்றோம். இம்முயற்சி கைகூடுமாறு நம் ஐயரவர்கட்கு இறைவன் திருவருள் புரிவாராக.

இடையிற் பாறைக்கிணறு வெட்டப்புகுந்து முகவையம்பதி முதலிய விடங்களிற் பெரும்புகழ் படைத்தவரும், திருவாமத்தூரிலிருந்து காலங்கழித்தவருமாகிய 'திருப்புகழ்ச் சுவாமிகள்' என்ற முருகதாச சாமியார் இயற்றிய * 'புலவர் புராணம்' என்றதோர் நூல் வெளிப்போந்துளது. இந்நூல் முழுதுஞ் செய்யுளானியன்றுளது. சாமானியமாகப் புலவர் வீடுகளிற் கதையாகச் சொல்லிக்கொள்ளும் விஷயங்களெல்லாம் ஒருவாறு தொகுத்து இந்நூலின்கட் கூறப்பட்டுள. காலவரையறை, நூலாராய்ச்சி முதலியன இந்நூலின்கட் கண்டிலேம். இதனையொரு காப்பியமாகக் கருதி ஆராய்தல் ஈண்டு எடுத்த விஷயமன்று. தமிழ்ப் புலவர் சரிதமாகுமட்டில் இஃது ஓராற்றாற் பயன்படுவதாகும்.

இதுகாறும் தமிழ்ப் புலவர் சரித விஷயமாக வெளிப்பட்ட நூல்களைப்பற்றி யுரைத்தாம். இனிச் சிற்சில நூல்களைப் பதிப்பித்த பதிப்பாசிரியர்கள் அவ்வந்நூலின் பதிப்புரைக்கண் நூலாசிரியர் வரலாறுகளும் தாங்கள் ஆராய்ச்சி

---

* அது கனம் பொருந்திய திவான் பகதூர் வ. கிருஷ்ணமாசாரியாவர்களாற் பதிப்பிக்கப்படுகின்றது. முதற் பாகம் வெளியாயிற்று. பன்னிரண்டு பாகங்களும் விரைவில் வெளிவரும் என்று நம்புகின்றோம். இதன் முதற் பாகத்திற் சில பகுதிகள் நமது சர்வ கலாசாலையின் பிரதம கலா பரீக்ஷைக்கும், கலா வித்தியார்த்திபட்ட பரீக்ஷைக்கும், கலாநாயகபட்ட பரீக்ஷைக்கும், பாடமாக ஏற்படுத்தப்பட்டுள. [இப்பொழுது இந்நூல் முழுதும் அச்சிடப்பட்டு வெளிவந்துள்ளது.]

செய்தமட்டிற் கூறியிருக்கின்றனர். சிலர் இக்காலத்தில் வெளிப்படும் தமிழ்ப் பத்திரிகைகளில் விஷயங்களாகத் தமிழ்ப் புலவர் சிலரைப்பற்றி யெழுதியிருக்கின்றனர். இதற்கிடை யிற் சில்லாண்டுகட்கு முன்னர் அஷ்டாவதானி - வீராசாமி செட்டியார் என்பார் 'விநோத ரசமஞ்சரி' என்பதோர் நூலி யற்றியிருக்கின்றனர். அஃது அதன் பெயர்ப் பொருளின்படி விநோதார்த்தமாக எழுதப்பட்டதோர் கதைத் தொகுதி யெனக் கொள்ளற்பாலதேயன்றித் தமிழ்ப் புலவர்களைப் பற்றியதோர் மெய்ச் சரிதமாகக் கொள்ளப்படுவதன்று. எனவே குறைபாடுகளனைத்தும் நீங்கி, யாவரும் ஏற்று மேற் கொள்ளத் தக்கதாய் தமிழ்ப் புலவராவாரனைவரையும் பற்றி ஒருங்கே கூறுவதாய் அன்னாரியற்றிய நூல்களின் ஆராய்ச்சி களுமுடையதாய்க் காலவரையறையும் தெளிவு பெற நியாய வாயிலாற் காட்டுவதாய் ஒரு தமிழ் நூல் இதுகாறும் வெளிப் பட்டிலது. அத்துகைய தொன்று என்று வெளிப்படுமோ? அறியோம். இந்த விஷயத்தைக் குறித்து நம்முடைய மது ரைப் புதுத் தமிழ்ச் சங்கத்தின் அதிகாரிகள் நன்கு கவனித்து நடப்பாராக.

வி. கோ. சூ.

———

# பொருளடக்கம்


| எண் | | | பக்கம் |
|---|---|---|---|
| 1. | செயங்கொண்டான் | ... | 1 |
| 2. | புகழேந்திப் புலவர் | ... | 9 |
| 3. | வைத்தியநாத நாவலர் | ... | 30 |
| 4. | சுப்பிரமணிய தீக்ஷிதர் | ... | 40 |
| 5. | மயிலேறும் பெருமாள் பிள்ளை | ... | 47 |
| 6. | சுவாமிநாத தேசிகர் | ... | 51 |
| 7. | அருணாசல கவிராயர் | ... | 56 |
| 8. | கடிகைமுத்துப் புலவர் | ... | 62 |
| 9. | தாமோதரம் பிள்ளை | ... | 65 |

# தமிழ்ப்
# புலவர் சரித்திரம்

## 1. சயங்கொண்டான்

இப்புலவர் பெருமானது பிறப்பு, வளர்ப்பு, வாழ்வு முதலியனவற்றுளொன்றும் நன்கு புலப்படவில்லை. ஆயினும் யாமாராய்ந்தமட்டிற் றெளிந்தனவற்றை யீண்டெடுத்துரைக்கின்றாம். இப்புலவர்பெருமான், உபயகுலோத்தமனெனவும், அபயனெனவும், சயதுங்கனெனவும் பல்வகைய சிறப்புப் பெயர்களும் பெற்ற விசயதர சோழனது வாயில் வித்துவான்கடந் தலைவன். "தெண்ணீர் வயற்றொண்டை நன்னாடு சான்றோருடைத்து," என்ற மூதுரையை மனக்கொளாது தென்னாட்டுப் புலவருட் சில்லோர் போந்து புரிந்த வாதப் போரின்கண் நந்தம் புலவர்பிரான் வென்றமை காரணமாகச் சயங்கோண்டானெனப் பட்டப் பெயர் பெற்றுத் திகழா நிற்புழி, விசயதரன் வடகலிங்கரைத் தொலைத்து வாகையந்தார் மிலைந்து போந்து, சயங்கொண்டானை நோக்கி, 'யானுஞ் சயங்கொண்டானாயினேன்,' என்றனன். எனவே, 'சயங்கொண்டான் சயங்கொண்டான்மீது பரணி நூற்புனைவான்,' என்று நம் பாவலர்கோமான் கூறிச் சென்று சின்னாட்களுள், 'கலிங்கத்துப் பரணி' என்னும் நூலினை யியற்றி யரசனதவைக்களத்தே பன்னூற் புலவர்முன் பகர்தந் தரங்

கேற்றிய கருதி, அவ்வாறே செய்யாநின்றுழி, பரணிநூற் பாடல்களைப் பரிவு கூர்ந்து செவிமடுத்து வீற்றிருந்த வேந்தர் வேந்தன் ஒவ்வொரு தாழிசையி னிறுதியினு மொவ்வொரு பொற்றேங்காய் பரிசிலாவுருட்டுபு தனக்கு அவ்வித்துவான் மீதும் அவனது நூலின்மீதுமுள்ள அன்பினையு மார்வத்தினையும் வெளிப்படுத்தானென்று கூறுப.

இக்கூற்றினை மெய்யெனக் கொண்டக்காற் சயங்கொண்டானென்பது கலிங்கத்துப் பரணியாக்கியோன தியற்பெயரன்றெனல் சொல்லாமலே விளங்கும்.

## சமயம்

இனித் "திருவுடைமன்னரைக் காணிற்றிருமாலைக் கண்டேனே யென்னும்," என்ற திருவாய்மொழியை யொருதூய் மொழியாக்கொண்டு விசயதரனை நேரே திருமாலெனவே கூறுகின்றனனேனும், இப்புலவர் பெருமானது சமயஞ் சைவமெனலே யமைவுடைத்தாம். அஃது கலிங்கத்துப் பரணியிற் கூறப்பட்டிருக்கும் முதற் செய்யுளாகிய கடவுள் வாழ்த்தினுற் றெளிவுபெறக்காண்க. அது வருமாறு:

புயல்வண்ணன் புனல்வார்க்கப் பூமிசையோன்
றொழில்காட்டப் புவன வாழ்க்கைச்
செயல்வண்ண நிலைநிறுத்த மலைமகளைப்
புணர்ந்தவனைச் சிந்தைசெய்வாம். 1

அருமறைக ணெறிகாட்ட வயன்பயந்த
நிலமகளை யண்டங் காக்கு
முரிமையினிற் கைப்பிடித்த வுபயகுலோத்
தமனபயன் வாழ்க வென்றே. 2

என்னை? கலிங்கத்துப்பரணியில் திருமான்முதலிய ஏனைய தேவர்க்கு முன்னர்ச் சிவபிரானது வணக்கங் கூறப் பட்டிருத்தலானும், உமாதேவி விநாயகர் முருகவேளாகிய இவர்கட்கெல்லாந் தனித்தனி வெவ்வேறு துதி கூறப்பட்டி ருத்தலானும், உமாதேவியினது அம்சமாகிய சத்தமாதர்களது வணக்கங் கூறப்பட்டிருத்தலானும் இவருடைய சமயஞ் சைவமென அறியக்கிடக்கின்றது.

இஃதிவ்வாறாகவுஞ் சிலர் நான்முகன் மாலாதி கடவு ளர்க்குந் துதி யுடன்கூறுதலிற் சைவ சமயத்திற் பற்றுடையா னல்லனென வாய் கூசாது மொழிவர். ஏனைக்கடவுளர்க்கும் துதி கூறுதல் சைவசமயிகளாயினார்தம் மியல்பென்பதும் வைணவராதி புறச்சமயிகளே அவ்வாறு சிவபெருமானாதி கடவுளர்க்குத் துதிகூறாரென்பதும் இருதிறத்தாரது நூல் களையுந் தூக்கி யொப்ப வாய்குநர்க்கு இனிது விளங்கும். அதான்றியும் சயங்கொண்டான் சைவனே யென்பது, சிவ மூர்த்தங்கட்கெல்லாந் துதியுரைத்தமையே யன்றி யம் மூர்த் தத் துதிகளில் விசேடப் பற்றுக்காட்டு மாற்றலுடைய சொற் களைப் பெய்துரைத் தமையினானே பசுமரத்தாணி யறைந் தென நாட்டப்படும். இனி யித்துணையு முற்றுநோக்கில் லாது சயங்கொண்டான் சைவனல்லன் சமரச நன்னிலை யுடையானென அன்னார் துணிந்த துணிவு அறிவாளர் கழகத்து நகையுண்டு அழியுமென்றறிக.

## காலம்

இது கிடக்க. இனிச் சயங்கொண்டான் இருந்த காலத் தினை வரைந்து சுட்டிய புகுகின்றாம். ஒரு சாரார் இவன்றன் காலம் கடைச்சங்கத்தார் காலத்துக்குப் பிற்பட்ட தென்ப

தும் கம்பர் காலத்திற்கு முற்பட்ட தென்பதும் மட்டுங் கூறலியலுமே யன்றி யின்ன யாண்டுகடாம் என்று வரை யறுத்துக் கூறுதல் யாவர்க்கும் முடியாதென்பாராயினர். மற் ெருரு சாரார் சிலாசாதந சரித்திர வாராய்ச்சியின்படி விசயத ரன் கலிங்கத்தை வென்ற காலம் கி. பி. 1066-ஆம் ஆண்டிற் கும் 1113-ஆம் ஆண்டிற்கும் உட்பட்டதெனப் புலப்படு கின்றதென்பர். ஆயின் ஏறக்குறையச் சாலிவாகன சகாத் தம் 1050-ஆம் யாண்டாகும். "எண்ணிய சகாத்தமெண் ணூற்றேழன்மேல்" எனுஞ் செய்யுளை மெய்யெனக் கோட லாமெனில், அதிற் கூறியாங்குக் கம்பர் காலம் 807-ஆம் யாண்டாம். அற்றேல் இந்நூலாசிரியனது காலம் கம்பர் தங்காலத்திற்கு இருநூற்றைம்பதியாண்டு பிந்தியதாம். இக் கால வரையறை, ஏனைய சான்றுகளோடு முரணுபு காலத்தை இன்னதெனச் சுட்டவொண்ணு வழியினிற் சிலர் தமை யுய்த்து இடர்ப்படுத்தும்; என்னை? 'கலிங்கத்துப் பரணியினது நடை கம்பர் காலத்தினரும் அவர்க்குப் பிந்திய காலத்தின ரும் ஆயவரது நடைகளைப் போலாது வடசொற்கள் மிகுதி யுங் கலவாத செந்தமிழ் நன்னடையிற் செய்யப்பட்டுச் சங் கச் செய்யுளாய சிந்தாமணி சூளாமணிகளோடு சேர்த்தெண் ணப்படத்தக்க பெருமை வாய்ந்து விளங்குதலினென்க' வென்பர். அல்லதூஉம் அடியார்க்கு நல்லார், கலிங்கத்துப் பரணிச் செய்யுட்களுட் சிலவற்றைத் தமது சிலப்பதிகார வுரையின்கண் மேற்கொண்டதூஉம் அந்நூல் கம்பர் காலத்தி னுக்கு முன்னரே பயிலப்பட்டு வந்ததென்பதற்குப் போதிய சான்றுமெனவும் அன்னூர் கூறுப.

இனி மெய்ம்மை வழியா னாராயப்புக்குழி, அந் நூலின் கண்ணே சோழராசரது தலைநகராகக் காஞ்சிமா

நகரினைக் கூறலானே இஃது உறந்தை தஞ்சைகளினின்றும் விலகி அரசனது வாசத்தானம் காஞ்சியாயின பின்னரே கலிங்கத்துப்பரணி யாக்கப்பட்டிருத்தல் வேண்டுமெனக் கோடலியலும்.

அன்றியும், கருணாகரத் தொண்டைமான் சென்று கலிங்கநாட்டை வென்றனனெனக் கூறுதலிற் சோணாட்டி னின்றுந் தொண்டைநாடு வேறு பிரிந்ததூஉம் இக்காலத்தின் கண்ணேயாம் என்பதும் ஏற்படுகின்றது. இக்காரணங்களி னானே முன்னர்க்கூறிய சிலாசாதந பரிசோதகர் கூறுநிற்குங் காலக்கணக்கே யொருவாறு வலியுறுகின்றமை காண்க. இத் துணையும் வாய்வது கம்பர் தங்காலஞ் சாலிவாகன சகாத்தம் 807-ஆம் யாண்டென்பது நிலைநின்றக் காலேயாம். மற்று ஆங் கிலமொழியின்கண் அச்சிட்டுப்போதரும், * இந்திய புரா தன கலைஞன் என்னும் மாதாந்தப் பத்திரிகையினாற் கி. பி. 1063-ஆம் யாண்டு பட்டத்திற்குப் போந்த இராசேந்திரசோழ னிரண்டாவனென்ற குலோத்துங்க சோழன் முதலாவனும், கி. பி. 1127-ஆம் யாண்டு பட்டமெய்திய குலோத்துங்க சோழனிரண்டாவனுமென்ற வீரரசர் கூறப்பட்டுளர். அவர் தம்முட் குலோத்துங்க சோழன் முதலாவனது காலமே நமது கம்பர்தங் காலமுமே யாமென்பது யாவர்க்கு மொப்ப முடிந்ததாம்.

ஆகவே கம்பரது காலம் பதினோரா நூற்றாண்டின் பிற் பகுதி யென்பது தானே போதரும். இனிக் கலிங்கத்துப் பரணியின் செய்யுணடை கம்பரது செய்யுணடையினும் எளிதாகவுஞ் சொன்முடிபு பொருண்முடிபுகள் செவ்வாக வாய்க்கப் பெற்றதாகவும் வடசொற்கள் பெரிதும் விரவப்

* The Indian Antiquary (Pages 296—299) October 1894

பெற்றதாகவு மிருத்தலிற் கம்பர் காலத்திற்குப் பிந்தியவனே சயங்கொண்டானென நிராடங்கமாய்ப் பெறப்படுதலறிக. மேலுங் கலிங்கத்துப்பரணியின் களம்பாடிய பகுதியில் 63-ஆஞ் செய்யுளின்கட் 'குலோத்துங்கச் சோழனைப் பாடீரே,' யெனக் கூறுதலி னீண்டைக் கூறிய குலோத்துங் கன் கி.பி. 1127-ஆம் யாண்டி லரசுரிமை யெய்திய மன்னனே யென்க.

இவன் குலோத்துங்கன் முதலாவனது பேரனுமாறும் விசயதரசோழனுமாறு முய்த்துணர்க. எனவே சயங்கொண் டானது காலம் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டேன்பது பெற்றாம். * இது நிற்க.

---

* கலிங்கத்தை வென்று பரணிகொண்டவன் விஜயதரன் என மறு பெயர்பூண்ட முதலாங் குலோத்துங்கனே யென்பதும், அவன் காலம் கி. பி. 1070 முதல் 1118 வரை யென்பதும், எனவே சயங்கொண்டான் காலமும் இதுவே யென்பதும் பின் னெழுந்துள்ள ஆராய்ச்சிகளாற் பெறப்படுகின்றன.

கம்பர் காலத்தைப் பற்றித் தற்போது தமிழ்நாட்டிற் பல வபிப்பிராயங்கள் பரவியுள்ளன. "எண்ணிய சகாத்த மெண்ணூற் றேழன் மேல்," என்ற கவியின் ஆதாரத்தைக்கொண்டு அவர் காலம் கி. பி. 885 என்று ஒரு சாராரும், கி. பி. 1118 முதல் 1130 வரை சோணாட்டில் அரசு புரிந்த விக்கிர சோழன் காலத் தவர் என்று மற்றொரு சாராரும் கூறுவர். ஆயினும், சோழ மண்டல சதகத்துத் தலைப்பு வரலாற்றை நம்பி, 'கம்பர் ஓரங்கல் உருத்திரனைப் பாடி யிருப்பதால், அவர் பன்னிரண்டாம் நூற் றாண்டின் கடைக்காலைச் சார்ந்தவர்' என்று மகா வித்துவான் ஸ்ரீ ரா. ராகவையங்கார் அவர்கள் செந்தமிழிற் பல ஆராய்ச்சிக் குறிப்புகளோடு வரைந்துள்ளார்.

கலிங்கத்துப் பரணியினை யியற்றினர் ஒட்டக் கூத்த ரென்பது ஒரு சாரார் துணிபு. இது யாமேற் கூறிய காரணங் களினனே சிதையுண்டொதுங்குமாறுணர்க. அன்றியும் ஒட்டக்கூத்தரது செய்யுணடையும் இந்நூலினது செய்யு ணடையும் வேறுபடுமாறுமோர்ந்தறிக. மற்று ஒட்டக்கூத்தர் செய்த பரணிகளும் வேறுள. அவை அண்டத்துப் பரணியும் பிறவுமாம். இனிக் கூத்தன் கவிச்சக்கரவர்த்தி யென்ற தமிழ்ப் புலவர் செய்த தக்கயாகப்பரணி யென்றொரு நூலுளது. இக்கூத்தன் கவிச்சக்கரவர்த்தியே யொட்டக் கூத்தரெனச் சிலர் கூறுநிற்பர். அஃதெவ்வாருயினுமாகுக.

கலிங்கத்துப் பரணியைப்போலவே யதுவும் பகுக்கப் பட்டுச் சொற்சுவை பொருட்சுவைகளிற் சிறந்து திகழ் கின்றது. அதற்கோரரிய வரும்பதவுரையுமுளது. அதனை யிப்பரணியினேடு தூக்கியாய்குநர்க்கு இரண்டனது நயங் களும் ஏற்றமு மினிது புலப்படும். விரிவஞ்சி யாமவ்வாறு செய்யாது விடுத்தனம்.

கலிங்கத்துப் பரணியின்கண்ணே பண்டையரசர்களது சரிதங்கள் பல கூறப்படுதலின் அவையனைத்துந் தக்கவாறு ஆராயப்படிற் சோழராசர்களைப்பற்றி யொரு சரித்திரம் வகுப்பதற்குப் பெருந்துணைக் கருவியாயிருக்குமென்ப துணர்க.

## கவித்திறமை

சயங்கொண்டானது பாக்களனைத்தும் ‘சுருங்கச்சொல் ல’லாதிய பத்தழகுமுள்ளனவாய் விளங்குகின்றன. சொன் னயமும் பொருணயமும் பாடறொறுங் காணலாம். இவன் றன் பாக்கள் சந்தவின்பம் பெரிதும் பயக்கும். ‘இழுமெனு மோதையினெழுகுறு மருவிபோல்’ இவன்றன் செய்யுட்

களெல்லாஞ் செல்லுகின்றன. குறிப்புப் பொருளும் இறைச் சிப்பொருளும் உள்ளுறையுவமங்களும் ஆங்காங்குப் பாடல் களிற் காணப்படும். சமயோசிதமாகச் சொற்களைப் பெய்த லும், கற்பனை செய்தலும், வீரம், வெகுளி, அவலம், அச்சம், காமம் முதலிய சுவைகளும், அச்சுவைகட்கேற்ற ஓசை யுடைமையும், எதுகை, மோனை நியமம் பிழையாமையும், இடர்ப்பட்ட சொன்முடிபு பொருண்முடிபுகளில்லாமையும், இன்ன மிவைபோல்வன பிறசிறப்புக்களும், அந்நூலின்கண் மிகவுமுள்ளன. மேலும் இப்பரணி யாவரானும் மேற் கோளாக எடுத்துப் பாராட்டத்தக்க சிறப்பு வாய்ந்த தாமாறு வெள்ளிடை மலையென விளங்குதலறிக. கலிங்கத்துப் பரணி யின்கண்ணே 54-சந்தபேதங்கள் காட்டப்படுகின்றன. இத னாராய்ச்சியினுற் பண்டைக் காலத்து ஒழுக்க வழக்கங்களும் நன்னரறியக் கிடக்கும்.

இவை பற்றியன்றே:

“ வெண்பாவிற் புகழேந்தி பரணிக்கோர்
சயங்கோண்டான் விருத்த மென்னு
மொண்பாவி லுயர்கம்பன் கோவையுலா
வந்தாதிக் கொட்டக் கூத்தன்
கண்பாய கலம்பகத்திற் கிரட்டையர்கள்
வசைபாடக் காளமேகம்
பண்பாய பகர்சந்தம் படிக்காச
லாதொருவர் பகரொ ணுதே ” 3

என்று பிற்காலத்தாராய பலபட்டடைச் சோக்கநாதப் புலவர் சிறப்பித்தெடுத் துரைத்ததூஉ மென்க.

---

# 2. புகழேந்திப் புலவர்

செந்தமிழ் மொழிக்கலைச் செல்வர் கூட்டுண்ண
நளன் மடைபோல வுளன்மகிழ் வுறக்குஞ்
செம்பாக மாகவச் சீர்நளன் காதையை
வெண்பாவின் யாத்த வியத்தகு கவிஞர், 4

புகழேந்திப் புலவரேன்பார்.

இவர் தொண்டைநாட்டிற் செங்கற்பட்டிற் கருகிலுள்ள பொன்விளைந்த களத்தூரில், துளுவ வேளாளர்குலப் பாலாழி யிற் கௌத்துவ மணியெனத்தோன்றி, இளம் பருவத்திலேயே கல்வி கற்பான் புகுந்து, செந்தமிழிலக்கிய இலக்கணக் கடலி னுட்டிளைத்து விளையாடிக் கவிமதஞ் சொரியுங் களிறெென வுலாவா நின்றார். இத்தகைப் புலவர் பெருமான் செந்தமிழ் நாட்டிற்கேகி ஆண்டுள்ள பாவலர் தம்மொடும் பயிறல் கருதிச் சோணாடு கடந்து,

" சந்தனப் பொதியச் செந்தமிழ் முனிவனுஞ்
சௌந்தர பாண்டிய னெனுந்திரு நாடனுஞ்
சங்கப் புலவருந் தழைத்தினி திருக்கு
மங்கலப் பாண்டி வளநாடு " 5

சென்று, அவ்வயிற் கூடலம்பதிக்கட் பாண்டிய ராசனுலா தரிக்கப்பெற்று அவன்றன் வாயில் வித்துவானு யமர்ந்தனர். இவரையாதரித்த பாண்டியனே வரகுண பாண்டிய னிரண் டாவனென்பர்.

இவ்வாறு நந்தங் கவிஞர்கோமான் பாண்டியனவைக் களத்துவித்துவானுயிருப்புழிச் சோணாட்டிலரசுரிமை யெய்தி

யாண்டு கொண்டிருந்த *குலோத்துங்க சோழன் முதலாவனுக்குப் போதகாசிரியரும், அவன்றன் சமத்தான வித்துவானுமாகிய ஒட்டக்கூத்தப் புலவர் தமது மாணாக்கனாய சோழ ராசற்குப் பாண்டியன் மகளை வதுவைபேசி முடிப்பான் மதுரைமா நகர்க்குப் போந்தனர். போந்து மாறனிடம் மன்றல் குறித்துப் பேசிக்கொண்டிருப்புழிப் பாண்டியன் புன்முறுவல் கோட்டிப் "பைந்தமிழ் வல்லீர்! நுந்தம் மன்னவன் எந்தங் குலத்திருமகளைக் கொளத்தகுங் குணவான் கொல்லோ?" என்று வினாயினன். என்னக் கேட்ட ஒட்டக்கூத்தர், சோழன் பெருமை தோன்றக்,

"கோரத்துக் கொப்போ கனவட்ட மம்மானே
கூறுவதுங் காவிரிக்கு வையையோ வம்மானே
யாருக்கு வேம்புநிக ராகுமோ வம்மானே
யாதித்த னுக்குநிக ரம்புலியோ வம்மானே
வீரர்க்குள் வீரனொரு மீனவனோ வம்மானே
வெற்றிப் புலிக்கொடிக்கு மீன்கொடியோ வம்மானே
யூருக் குறந்தைநிகர் கொற்கையோ வம்மானே
யொக்குமோ சோணாட்டைப் பாண்டிநா டம்மானே?"

என்றதோர் பாடலைச் சொற்றனர். அங்ஙனம் அது கேட்டருகிருந்த நந்தம் புகழேந்திப் புலவர் மனம் பொறாது எழுந்து, அதற்கு மாறாகப் பாண்டியன் பெருமை தோன்ற,

"ஒருமுனிவ னேரியிலோ வுரைதெளித்த தம்மானே
யொப்பரிய திருவிளையாட் டுறந்தையிலோ வம்மானே
திருநெடுமா லவதாரஞ் சிறுபுலியோ வம்மானே
சிவன்முடியி லேறுவதுஞ் செங்கதிரோ வம்மானே

---

*பின்வந்த ஆராய்ச்சியாளர் இவனைக் குலோத்துங்க சோழன் இரண்டாவன் என்ப.

கரையெதிரல் காவிரியோ வையையோ வம்மானே
  கடிப்பகைக்குத் தாதகியங் கண்ணியோ வம்மானே
பரவைபணிக் ததுஞ்சோழன் பதந்தனேயோ வம்மானே
  பாண்டியனுர் பராக்கிரமம் பகர்வரிதே யம்மானே,'' 7

என்றதோர் பாடலைப் பாடி அவர் கூற்றைக் கண்டித்தனர். அப்பொழுதே யொட்டக்கூத்தர்க்கு நம் புகழேந்திப் புலவர்மே லழுக்காறுண்டாயிற்று. பின்னர் ஒட்டக்கூத்தர், தக்கவாறு பலவற்றை யெடுத்துரைத்து, வழுதிமகளைச் சோழற்கு மணஞ்செய்தளிப்பான் நிச்சிதார்த்தஞ் செய்து போந்து, தம்மாணுக்கனுய சோழராசற்கு அச்செய்தியை யறிவுறுத்தார். உடனே சென்னியுந் தனக்குப் பிரதிநிதியாகச் சின்னுள் தான் மணவினை முடித்துவருங்காறும், அரசாளுமாறு ஒட்டக்கூத்தரைத் தன்னுட்டகத்திருத்திச் சேனைகளோடும் மதுரை சென்று ஆலவாயிற் பெருமானடிகளை வணங்கி, மாறன் மகளை மணஞ்செய்துகொண்டனன். பின்னர்ப் பாண்டியன் தன்னருந்தவச் செல்வமகட்குத் தான் கொடுத்த பாரிபோக வரிசையுடன் நந்தம் பாவலர்தலைவர் புகழேந்திப் புலவரையும் அவளுக்கு ஏற்ற வமயங்களிற் றக்கவாறு புத்தி கூறும் பொருட்டு அனுப்பினுன்.

அவ்வாறே யவர் சோணுடுபோந்தமை யுணர்ந்த வொட்டக்கூத்தர் பழம்பகைமை பாராட்டி அவரை மாவித்துவானென மதித்தலின்றி யிரக்கந் துறந்து கறுக்கொண்டு, "இவன் முன்னர் நமக்குப் பெண்கொடுக்கவொட்டாது தகைத்து நந்தங் குல முதலியவற்றைப் பாண்டிய னெதிரிற் பழித்துரைத்தோன்,'' என்று கோட்சொல்லி யரசனை நம்புமாறு செய்து நந்தம் புகழேந்திப் புலவர்தம்பிரானைக் காவற் சிறையகஞ்

செறித்தார். அவர் 'இது கர்மாநுசாரம்' எனக்கருதி அச் சிறைக்க ணிருந்து கொண்டு அதனருகே தண்ணீர்க்குச் செல் லுறாஉம் மகளிர்தஞ் செவிக்கினிமையாக, இக்காலத்தில் நங் கைப் பாட்டெனன வழங்குறாஉம் அல்லியரசிமாலை, பவளக் கொடிமாலை, புரந்தரன் களவுமாலையென்னு நூல்களை எளிதிற் பொருள் விளங்குமாறுபாடி, அவர்கட்குக்கொடுத்து, அது பற்றியவர்கள் மனமகிழ்ந்து கொண்டுவந்து கொடுத்த நல்லரிசி பருப்பு முதலியவற்றைச் சாளர வழியாய்ப் பெற்றுச் சமைத் துண்டு, மிகுந்ததைச் சிறைக்காவலர்க்கீந்து அவர்தமைத் தம் வயப்படுத்திக்கொண்டு காலங் கழித்து வருவாராயினர்.

இங்ஙனமிருந்து வருநாளில் ஒருநாட் சோழராசன் தனது பட்டத் தரசுவாவின் மீது இவர்ந்து வீதியிலுலா வரும்போது காவற் சிறைக்கோட்டத்தின் மேற்றளத்தில் நின்ற புகழேந்தியாரைத் தன்னுசிரியர் ஒட்டக்கூத்தருக்குக் காட்டி, 'இவர் செந்தமிழ் மொழியிற் சிறந்த புலவரல்லரோ ?' என்று வினவலும் அவர் தம்மினுமிழிந்தார் புகழேந்தியா ரென்பதுபட அவரை யிகழ்ந்து புனைவிலி புகழ்ச்சியணியாக,

" மானிற்கு மோவந்த வாளரி வேங்கைமுன் வற்றிச்செத்த
காணிற்கு மோவவ் வெரியுந் தழன்முன் கனைகடலின்
மீனிற்கு மோவந்த வெங்கட் சுறவமுன் வீசுபனி
தானிற்கு மோவக் கதிரோ னுதயத்திற் றூர்மன்னனே " 8

என்றதோர் பாடலைக் கூறினர். அது செவிக்கொண்ட புக ழேந்தியார் 'அப்பாடலை வெட்டிப் பாடவோ ஒட்டிப் பாடவோ ?' எனச் சோழனைக் கேட்டுழி, அவன் 'ஒட்டியே பாடுதி' ரெனலும் நந்தம் ஆசுகவிவல்ல அறிஞர்,

"மானவ னனந்த வாளரிவேங்கையும் வற்றிச்செத்த
கானவ னனவ் வெரியுந் தழலுங் கனைகடலின்
மீனவ னனந்த வெங்கட் சுறவமும் வீசுபனி
தானவ னனக் கதிரோ னுதயமுந் தார்மன்னனே" 9

யென்றுபாடி யொட்டக் கூத்தர்தம் ஏக்கழுத்தம் போக்கினார். சோழன் அக்கணம் புகழேந்திப் புலவரிடம் மதிப்புங் கருணையுங் கொண்டனனேனும் தனக்கு ஒட்டக் கூத்தரிடத்திலுள்ள அபிமானத்தினா லவரைச் சிறை நீக்காது போயினான்.

இனி இது நிற்க. பாடல் பாடிக்கொண்டுவரும் பாவலர்க்குச் சோழராசன் கண்டபடியெல்லாம் பரிசிலளிப்பதை யொட்டக்கூத்தர் தடுத்துவிட்டு இராச சமஸ்தானத்தில் வெகு மதி பெறக்கருதிப் போதரும் வித்வான்களைச் சிறைக்கோட்டத்திட்டுத் தேவி கொலுவீற்றிருக்கும் நவராத்திரியுற்சவ காலத்தில் அவர்தமை யழைப்பித்துத் தாம் பல்வகைப்பட்ட கடுவினாக்களெழுப்பி, அவற்றைத் தக்கவாறிறுக்கத் தெரியாரை யவமதித்து வந்தனரேயன்றி, அந்தோ! அவர்தமை யிவ்விருவராகக் குடுமியோடு குடுமிமுடிந்து இறங்கி நிற்குமாறு தேவிமுன்னர் நிறுத்திப் பிடாரிக்கிரட்டைக்கடா வெட்டுமாறு போலச் சிறிதேனும் அருளின்றி அன்னர் தலைகளைப் பதைக்கப்பதைக்க வெட்டிப் பலிசெலுத்தும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தார். இத்தகைய கடுவழக்கத்தை யொட்டக்கூத்தர் மேற்கொண்டது இக்காலத்திற்போலவே யக்காலத்திலும் புல்லறிவாளர் பலர் பண்டிதர், மாபண்டிதர், கவி, கவிராயர், பாவலர், நாவலர், அட்டாவதானி, வித்துவான், வித்துவச் சிரோமணி யென்பனவாதிய பல்வகையவாய பட்டப் பெயர்

களை யெவருங் கொடுக்கவேண்டிய அவசியமின்றித் தாம் சுய மாகவைத்துக்கொண்டு தாந்தோன்றிகளாய்த் திரியவொட் டாத வண்ணம் கல்வியினருமை பெருமைகளையு மேற்றத் தாழ்வுகளையுந் தெரிக்குறாஉம் நல்லவழியென வுள்ளவாறே நம்பியே போலும்! இது பற்றியன்றே,

"குட்டுதற் கோபிள்ளைப் பாண்டிய னீங்கில்லை
குறும்பியள வாக்காதைக் குடைந்து தோண்டி
யெட்டினமட் டறுப்பதற்கோ வில்லி யில்லை
யிரண்டொன்று முடிந்துதலை யிறங்கப் போட்டு
வெட்டுதற்கோ கவியோட்டக் கூத்த னில்லை
விளையாட்டாக் கவிதைதனை விரைந்து பாடித்
தெட்டுதற்கோ வறிவில்லாத் துரைகளுண்டு
தேசமெங்கும் புலவரெனத் திரிய லாமே," 10

எனப் பிற்காலத்திருந்த காளிமுத்தம்மையுங் கழறு வாளாயினள். இவ்வாறே பரிசுபெற வந்த பாவலர் பலரை யும் வழக்கப்படி யொட்டக்கூத்தர் புகழேந்தியாரிருக்குஞ் சிறைக்கண்ணே செறித்தார். அஃதுணர்ந்த புகழேந்திப் புல வர் அவர்பால் மிகப் பரிவுகூர்ந்து அவர்தமை உய்விக்கவும் ஒட்டக்கூத்தரைப் பங்கஞ் செய்விக்கவுங் கருதி அவர் தமுள் நல்ல புத்திமான்களாய குயவன், அம்பட்டன், கொல் லன், வேளாளன், தச்சன், தட்டான், முதலிய சிலரைத் தெரிந்தெடுத்து அவர்க்கு விசேடமாகக் கல்வி கற்பித்து வைத்து, நவராத்திரி காலத்திற் சிறையகப்பட்ட வித்துவான் களை யொட்டக்கூத்தர் வரவழைப்புழி யேனைய புலவர்கள் தாம் கலைபயிற்றியவர்களினும் கல்வியிற் குறைந்தவர்களா யிருந்தமை பற்றி அவர்களை முதற்க ணனுப்பாது குயவன்

முதலியோரை ஒவ்வொருவராய் ஒட்டக்கூத்த ரெதிரிற் போய்த் தைரியமாய் நின்று அவர் வினவும் வினக்கட்குத் தக்கவாறு விடை பகர்ந்து வெற்றிகொள்ளும்படி திட்டஞ் செய்து விடுத்தனர். விடுத்தாங்கே முதற்கட் குயவன் சென்று கூத்தரெதிரிற் கும்பீடின்றி நின்ருன். அதுகண்ட வொட்டக் கூத்தர் அவனை நோக்கி,

"மோனை முத்தமிழ் மும்மத மும்பொழி
யானை முன்வந் தெதிர்த்தவ ணரடா?" 11

எனலும், அச்சுருக் குயவன் புலவரை நோக்கி,

"கூனை யுங்குட முங்குண்டு சட்டியும்
பானை யும்பண்ணு மங்குசப் பையல்யான்," 12

என மற்றை யீரடிகளையும் பாடி முடித்து விடைகொடுத்தலும் ஒட்டக்கூத்தர் வெட்கி, அவனைத் தனியே வேற்றிடம் நிறீஇ மற்றெருவனை விளித்தலு மொருகண் பொட்டையான வம்பட்டன் போந்து நின்ருன். அவனை நோக்கிய வொட்டக் கூத்தர்,

"விண்பட்ட கொக்குவல் லூறுகண்
டென்ன விலவி லக்கப்
புண்பட்ட நெஞ்சொடு மிங்குநின்
ருய்பொட்டை யாய்புகலாய்," 13

எனலும், சிறிதும் பின்வாங்காத மயிர்வினைஞன்,

"கண்பொட்டை யாயினு மம்பட்ட
ஞன்கவி வாணர்முன்னே
பண்பட்ட செந்தமிழ் நீயுந்
திடுக்கிடப் பாடுவெனே," 14

யென்று எடுத்த பாட்டை முடித்து விடுத்தான். அது கேட்ட புலவர் வெகுண்டனரேனும் அவனை யொன்றுஞ் செய்யக் கூடாமையா லவனை யப்புறம் நிறுத்திவிட்டு இன்னொருவனை விளித்து முன்போலக் கவி சொல்லி, வினவாமல் வாசக நடையாய் அவனை, "நீ யார்? உன் பெயர்குல வரலாறு கள் யா? சொல்," என்று கேட்ட வளவில் எதிரே நின்ற கொல்லன்,

"செல்வன் புதல்வன் திருவேங் கடவன் செகத்குருவாங்
கொல்லன் கவியைக் குறைசொல்லு வோரைக் குறடுகொண்டு
பல்லைப் பிடுங்கிப் பருந்தாட்ட மாட்டிப் பகைவர்முன்னே
யல்லும் பகலு மடிப்பேன் கவியிருப் பாணிகொண்டே," 15

என்று பாடி விடை பகர்ந்தான். இவனையுமப்புறப்படுத்தி வேறொருவனை விளித்தலும் போந்து நின்ற வேளாளனைப் பார்த்து, 'மாவித்துவானாய நம் முன்னர் அற்பனாய நீயுமொரு புலவனாய்ப் போந்து நிற்றல் நேரிதோ?' எனக் கேட்டதற்கு, வேளாளன்,

"கோக்கண்டு மன்னர் குரைகடல் புக்கிலர் கோகநகப்
பூக்கண்டு கொட்டியும் பூவா தொழிந்தில பூதலமேழ்
காக்கின்ற மன்ன கவியொட்டக் கூத்தநின் கட்டுரையாம்
பாக்கண் டொளிப்பர்க ளோதமிழ்ப் பாடிய பாவலரே," 16

என்றதோர் பாட்டி லேற்றவா றவன் கடாவையிறுத்து முன்னர் ஒட்டக்கூத்தர் பாடியிருந்த அண்டத்துப்பரணி யென்னு நூலிலொரு பெரிய குற்றமுமெடுத்துக் காட்டினான். இவ்வாறே,

"சோன்னசந் தக்கவி யாவருஞ் சொல்லுவர் சொற்சுவைசே
ரின்னசந் தக்கவி யேதென்ற போதி லெதிர்த்தவரை
வன்னசந் தங்கெட வாயைக் கிழித்திந்த வாய்ச்சியினுற்
கன்னசந் தங்களி லிக்கவி யாப்பைக் கடாவுவெனே," 17

யெனத் தச்சனும்,

"திகிரிவட் டக்குடைச் செங்கோ லபயன் செழுஞ்சிலம்பிற்
பகுதியொட் டக்கூத்தப் பட்டனே நாணப் பணைக்கவியின்
மிகுதியொட் டத்தட்டி விட்டகை யோட்டி யுருக்கிக்குத்திப்
புகுதவொட் டத்தட்டிமேலணு காவணம்போர்செய்வெனே,"

யெனத் தட்டானும் பாடி யொட்டக் கூத்தரை யவமதித்த லும் அவர் இவர்கள் வல்லமையைக் கண்டு கர்வபங்கப்பட்டு மற்றையோரை யழையாம லிவையனைத்தும் புகழேந்தியாரால் நிகழ்ந்தனவென் றுய்த்துணர்ந்து, அவர்மேன் முன்னினும் பதின்மடங் கதிககோபங்கொண்டு, அவரைத் தவிர்த்து ஏனை யோரனைவரையுஞ் சிறைநீத்து விடுத்தார். அவர்கள் யாவ ரும் அரசனிடம் தக்க வெகுமதி பெற்றுப் புகழேந்திப் புல வரை வாயார வாழ்த்திக்கொண்டு சென்றார்கள்.

இவ்வாறெல்லாம் ஒட்டக் கூத்தராற் புகழேந்திப் புலவரெய்திய விடர்ப்பாடுகளனைத்தையு மொருநாட் சில திப் பெண்டிராற் றெரிந்துகொண்ட சோழராசன் மனைவி மிக்க மனவருத்தமுற்றுத் தன்னுயகன் ஒட்டக்கூத்தப் புலவர்கைச் சூத்திரப் பாவையாகி நியாயமுங் கருணையு மின்றித் தன் தந்தையின் சமத்தான வித்துவானாகிய புக ழேந்திப் புலவரைச் சிறைக்கோட்டத் திரீஇயின னென்று கருதி யரசன்மீது கோபங்கொண்டு புகழேந்தியாரைச் சிறை நீக்க வெண்ணித் தன் றலைவன் பள்ளியறைக்குப் போதரும்

போது தானுள்ளே யிருந்து கதவினைத் தாழிட்டாள். அஃதுணர்ந்த வண்ணல் அவளைப் பலவாறு வேண்டியுங் கதவு திறவாமையால் அவளது ஊடறணிப்பா னொட்டக் கூத்தப் புலவரை யுய்த்தனன். அவர் சென்று,

"நானே யினியுன்னை வேண்டுவ தென்கொ னளினமலர்த்
தேனே கவாடந் திறந்திடு வாய்திற வாவிடிலோ
வானே றனைய விரவி குலாதிபன் வாயில் வந்தாற்
றானே திறக்குநின் கைத்தல மாகிய தாமரையே," 19.

என்று பாடியவளவில் அது கடுமையாயிருந்தமை குறித்து, அவள் 'ஒட்டக்கூத்தர் பாட்டுக் கிரட்டைத் தாழ்ப்பாள்,' என்று மொழிந்து முன்னினும் பலமாகத் தாழிட்டாள். இது செவிசாத்திய சோழர்பிரான், 'புகழேந்திப் புலவரை யாம் நெடுநாளாகச் சிறையகத்திட்டு வருத்தியமையால் நம் தேவிக்கு ஊடலுண்டாயிற்று,' என்று உய்த்துணர்ந்து கொண்ட வக்கணமே புகழேந்திப் புலவரைச் சிறை நீக்கி யரசியின் பிணக்கந் தணிக்குமா றேவலும், அவர் அந்தப்புரஞ் சென்று பள்ளியறையருகர் நின்று,

"இழையொன் றிரண்டு வகிர்செய்த
நுண்ணிடை யேந்தியபொற்
குழையொன் றிரண்டு விழியணங்
கேகொண்ட கோபந்தணி
மழையொன் றிரண்டுகைம் மானா
பரணனின் வாயில் வந்தாற்
பிழையொன் றிரண்டு பொறாரோ
குடியிற் பிறந்தவரே," 20

என்று பாடலுங் கேட்ட இராசமாதேவி யுடனே மகிழ்ச்சி யடைந்து ஊடலொழிந்து கதவந்திறந்தனள். அன்று தொட்டுப் புகழேந்திப் புலவர்க்கு நற்காலம் பிறந்தது; சோழராசனு மவரை யன்புடன் பாராட்டி வந்தான். ஆயினும் அவர், தம்மைக்கண்டு ஒட்டக்கூத்தருக்கு அழுக்காறு முதிர்வதனாலும், அவ்வொட்டக்கூத்தர் தம் பேச்சைக் கேட்டு அவர் கூறியாங்கே யரசன் நடப்பதனாலும், அங்ஙனமே நிலையாயிருக்க விரும்புதலின்றி யரசனனுமதி பெற்று, அச்சோணாட்டையே சேர்ந்த மள்ளுவமென்னுஞ் சிற்றரசு நாட்டின்கண் முரணூரிலிருந்து அரசு செலுத்திவந்த சந்திரன் சுவர்க்கி யென்னுங் குறுநில மன்னனிடத்துச் சென்று, அவன்றன் வாயில் வித்துவானா யமர்ந்தார்.

இவ்வாறவர் அமர்ந்திருக்குங் காலத்தே சமஸ்கிருத மொழியினுள்ள நளசரித்திரத்தை வடமொழி வல்லுநர் பிரசங்கிப்பக் கேட்டுக்கொண்டு வீற்றிருந்த சந்திரன் சுவர்க்கி நந்தம் புகழேந்திப் புலவரை நோக்கி, 'நீவிரிதனைச் செந்தமிழ்ப் பாவினிற் காப்பியமாக யாக்கல் வேண்டும்,' என்றான். வேந்தனாணையைச் சிரமேற்கொண்ட கவிஞர், 'புலவர்க்கு வெண்பாப்புலி'யெனச்சிறப்பித் தோதப்பெறும் வெண்பாயாப்பினிற் செவ்வனே புனைந்து யாத்து யாவருங் களிகூர்ந்து சிரகரகம்பஞ் செய்யுமாறு அவனவைக்களத்தே யரங்கேற்றினர்.

இது கேள்வியுற்ற குலோத்துங்க சோழன் மிக்க மரியாதையோடும் புகழேந்திப் புலவரை வரவழைத்து உபசரித்துத் தனதவைக்களத்தே யவர் பாடிய நளவெண்பாவைப் பிரசங்கித்து மீட்டு மொருமுறை யரங்கேற்றுமாறு வேண்டினன். அன்னணமே புகழேந்தியாரும் நாடோறும் பிரசங்கஞ் செய்துகொண்டு வாராநிற்புழி,

"மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லைமலர்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது," 21.

என்னும் பாடலைச் சொல்லலும், அவை நடுவணிருந்த ஒட்டக் கூத்தப் புலவர் எழுந்து, "இதன்கண் மல்லிகை யரும்பினைச் சங்காகவும வண்டினைச் சங்கூதுவோனாகவும் உருவகஞ் செய்துரைத்தது உசிதமே யெனினும் ஒக்குமாறன்றென்பது தேற்றம்! யாங்ஙனமெனிற் சங்கவாத்தியம் வாசிப்போர் அதனடியினை வாயில்வைத் தூதாநிற்பக் கண்டும் நீவிர் அதற்கு மாறாக மேற்புறத்தூதும் வண்டினை யன்னணங் குறித்தது இயற்கைப் பொருளுணர்ச்சியின்மைக் குற்றமாம்," என்றார். என்னக் கேட்ட வின்றமிழ்ப் புகழேந்திப் புலவர், 'கட்குடியனுக்கு வாயென்றும் மற்றென்றென்றுந் தெரியுமா?' எனச் சாதுரியமாக மறுமொழி தந்து நின்றார். இன்னுமிது போலவே யொட்டக்கூத்தர் இடையிடையே செய்து நின்ற ஆட்சேபனைகளை யெல்லாம் புகழேந்திப் புலவர் அவ்வக் கணமே தக்கவாறு நிராகரித்துத் தம் பக்கங்களை நிறுவுவாராயினர். கம்பர் முதலிய வித்துவான்கள் நம் புகழேந்திப் புலவர்க்குச் சார்பாய் நின்று புகழ்ந்தார்கள். எனினும ஒட்டக்கூத்தர் இவ்வாறு நாடோறும் தம் பாடலிற் குறை கூறுதலைப் புகழேந்திப் புலவர் பொறுக்கவில்லை. இவ்வொட்டக் கூத்தரை யெவ்வாறேனு மொழித்து விடுதலே தக்கதென்றுளத்துன்னி, ஒரு நாளிரவு எவருமறியாதபடி புகழேந்திப் புலவர் ஒட்டக்கூத்தப் புலவர் தம் இல்லஞ் சென்று அவரை யுறங்குழிக் கல்லானெறிந்து கொன்றுவிடுமாறு அவரது பள்ளியறைக்கருக ரொளிந்திருந்தனர். அவரொளித்துக் கொண்ட

சிறிது நேரத்தினுள் ஒட்டக்கூத்தர் மனைவி தனது தலைவரிடம் போந்து, 'தாங்களேனோ விவ்வாறு உணவின்மீது வேட்கை யற்று மனக்கவற்சி யெய்துகின்றீர்கள்? காலந் தாழ்த்தலின்றி யின்னினியே வம்மின். என்னன்புடைத் தலைவீர்!' என்று வேண்டி நிற்புழி, ஒட்டக்கூத்தர், புகழேந்திப் புலவர் யாத்த நளவெண்பா வின்னமுதம் பருகிய வெனக்கு நீயிடும் தீஞ் சுவை யடிசிலின்மீ தார்வம் பிறக்கவில்லை' யென்றனர். இச் சொற்கள் நம் புகழேந்தியார் செவிகளில் வீழ்ந்தவளவில் உவகை சிறந்து ஒட்டக்கூத்தரிடம் ஓடிவந்து, 'ஐய வண்டமிழ் வல்லீர்! நும் மெய்யிய லுணரப்பெறாது நும்மை யொருகணத் தினு ளுயிர்போக்கக் கருதிய பாவியேன் யான்,' என்று கூறித் தழுவித் தாங்கொணர்ந்த கல்லையுங்காட்டித் தம்மீது பொறை பாராட்டுமாறு அவரை வேண்டிக் கொண்டனர். இஃ துணர்ந்த ஒட்டக்கூத்தர் களிப்படைந்து புகழேந்தியாரோடும் உளமொத்த நட்புப் பாராட்டுவோராயினர். மன்னவன் குலோத்துங்கனும் மற்றைய பாவலரு மிச்செய்தி கேள்வி யுற்று மகிழ்ச்சி யெய்தினர். இனியொருநாட் சோழ ராசன் திருநெய்த்தானமென்னுந் திருப்பதிக்க ணெழுந்தருளியிரா நின்ற சிவபிரான்மீது 'நெய்த்தானத்தானைச் சேவித்தே,' யென் பதனை மகுடமாகக் கொண்டு சந்த விருத்தமொன்று ஆசு கவியாகப் பாடுமாறு சொல்லலும், ஒட்டக் கூத்தரும், புக ழேந்தியும் முறையே,

"விக்கா வுக்கா வித்தா விப்போய்
விட்டார் நட்டார் சுட்டூர் புக்கா
ரிக்கா யத்தா சைப்பா டுற்றே
யிற்றே டிப்போய் வைப்பீர் நிற்பீ

ரக்கா டப்பேய் தொக்கா டச்சூ
        ழப்பா டத்தீ வெப்பா டப்பூ
ணைக்கா டக்கா னத்தா டப்போ
        நெய்த்தா னத்தா னேச்சே வித்தே,"

"தற்கோ லிப்பூ சற்பா சத்தே
        தட்டா மற்சா கைக்கே நிற்பீர்
முற்கோ லிக்கோ லிப்பூ கித்தே
        முட்டா மற்சே வித்தே நிற்பீர்
வற்ரு நெட்டோ டைப்பா ரைச்சேன்
        மைப்பூ கத்தே றித்தா விப்போய்
நெற்ரு ஞற்ரு லைப்பா கிற்சேர்
        நெய்த்தா னத்தா னேச்சே வித்தே,"

என்ற பாடல்களைப் பாடினுர்கள். இனி யிவற்றி னேற்றத் தாழ்வுக ளொருபுற மிருப்ப, இச் செய்திக்குமாருக ஒட்டக் கூத்தரைப் புகழேந்திப் புலவர் வென்றனரென்று,

"நூலார் கலைவல்ல செம்பியன் கேட்க நொடித்தமிக்க
கோலா கலனெட்டக் கூத்தனை யன்றுதற் கோலியென்று[ண்ட
மேலார் கவிசொல்லி நெய்த்தானத் தேசென்று வென்றுகொ
மாலார் களந்தைப் புகழேந்தி யுந்தொண்டை மண்டலமே,'

என்ற தொண்டை மண்டல சதகச் செய்யுள் முழங்கா நிற்கும்.

இன்னுமொரு காலத்தில் திருக்குறுங்குடி யென்னுந் தலத்தினிடத் தெழுந்தருளி யிருக்குந் திருமாலின்மீது வல்லோசை மிக்க கட்டளைக் கலித்துறை யாப்பிற் பாடுமாறு கேட்டலும், ஒட்டக்கூத்தரும் புகழேந்தியும் முறையே,

"திக்குளெட் டுக்கயந் துக்கமுற் றுத்திடுக் கிட்டலற
மைக்கடற் குட்சரந் தைக்கவிட் டோற்கிட மாமதுர
இக்குமுற் றிக்கணுச் சற்றுவிட் டுத்தெறித் திட்டமுத்தைக்
கொக்குமொக் கிக்கக்கி விக்குமச் சோலைக் குறுங்குடியே,"

"எட்டெழுத் தைக்கருத் திற்குறித் திட்டுநித் தம்பரவுஞ்
சிட்டர்கட் குத்திருப் பொற்பதத் தைச்சிறக் கத்தருமவ்
வட்டநெட் டைப்பணி மெத்தையத் தற்கிடம் வாரிசப்பொ
குட்டினத் துக்குலந் தத்திமுத் தீனுங் குறுங்குடியே,"

யென்ற பாடல்களைப் பாடினர். ஒன்றற்கொன்று உயர் விழிவுகளின்றிச் சிறந்து விளங்குறாஉம் அச்செய்யுட்களை மன்னவன் கேட்டு மகிழ்பூத்து இருவர்க்கு மொப்பச் சன் மானஞ்செய்து பாராட்டி வந்தனன்.

இஃதிவ்வாருக, ஒரு நாள் உறையூரின்கட் சோழராசன் ஒட்டக்கூத்தரொடும் புகழேந்தியாரொடும் அரசமறுகிற் கானடையாய் உலாவிச்செல்லாநிற்புழி, ஒரு வீட்டுத்தெருத் தெற்றியில் இருதாள்களையும் நீட்டிக்கொண்டு வீற்றிருந்த ஔவையார் சோழனைக் கண்டதும் ஒரு தாளை மடக்கிக் கொண்டனர். அவனருகிற்போதரும் புகழேந்திப் புலவரைப் பார்த்தவளவின் மற்றைத்தாளையும் மடக்கிக் கொண்டனர். அதன்பினர் அவர்களை யடுத்துப்போந்த ஒட்டக்கூத்தரைக் கண்டவுடனே அவரைக் கர்வபங்கஞ் செய்வான் கருதி யிருதாள்களையுமொருங்கே நீட்டினர். இதுகண்ட ஒட்டக் கூத்தர் வெட்கமும் வெகுளியுமுடையராய்த் தமிழ் மூதாட்டி யாரை நோக்கி, 'எம்மை இன்னணம் அவமதித்தது என் கொலோ?' என்று வினவலும், அவர் மன்னன் நாட்டுத் தலைவனுதலின் அவற்கொருதாளையும், மன்னனிற் கற்றோன்

சிறப்புடையனுதலிற் பாட்டுத் தலைவராய புகழேந்திப் புலவருக்கு இருதாளையும் மடக்கினேம். நீயோ, புலமையோனெனினும் புல்லியோனுய் வீண்பெருமை பாராட்டுவோனுயினை யாதலின் இருதாளையும் நீட்டினேம்', என்று கூறி, 'மெய்யாகவே நீயும் புகழேந்திப் புலவர்க்கு இணையாவையேற் சோழனையும் அவனது நாட்டையும் சிறப்பித்து மதிப்பெயராமொருசொல்லை யொருபாடலி னீற்றடிக்கண் மும்முறை பெய்து பாடுதி; நின்னுற்றல் காண்குதும்,' என்றேவலும், ஒட்டக்கூத்தர்,

> "வெள்ளத் தடங்காச் சினவாளை
> வேலிக் கமுகின் மீதேறித்
> துள்ளி முகிலைக் கிழித்துமழைத்
> துளியோ டிறங்குஞ் சோணுடா
> கள்ளக் குறும்பர் குலமறுத்த
> கண்டா வண்டர் கோபாலா
> பிள்ளை மதிகண் டிப்பேதை
> பெரிய மதியு மிழந்தாளே,"

என்று, பிள்ளை தாமெனவும் பேதை ஔவையாரெனவும் தம மறிவுகண்டு ஔவையார் அறிவிழந்தாளெனவும் ஔவையாரைக் குறிப்பினிகழ்ந்து பாடினர். அஃதுணர்ந்த ஔவையார் ஒட்டக்கூத்தரை நோக்கி, "ஒட்டா! ஒரு மதிகெட்டாய்!" என்று கூறி நகையாடி, உடனே புகழேந்தியாரை நோக்கி, 'யான் சொற்றுங்கு நீவிர் பாடுமின்,' எனலும், புகழேந்திப் புலவர்,

> "பங்கப் பழனத் துழுமுழவர்
> பலவின் கனியைப் பறித்ததென்று
> சங்கிட் டெறியக் குரங்கிளநீர்
> தனைக்கொண் டெறியுந் தமிழ்நாடா

* கொங்கர்க் கமரா வதியதிளித்த
கோவே ராச குலதிலகா
வெங்கட் பிறைக்குங் கரும்பிறைக்கு
மெலிந்தப் பிறைக்கும் விழிவேலே,"

என்று ஒரு பாட்டு, மும்முறை பிறையெனுஞ் சொல்லை யிறுதி யடியிற் பெய்து, பாடினர்; இது கேட்டு ஔவையார் புகழேந்திப் புலவரைப் பெரிதுங் கொண்டாடினர். அன்று முதல் ஒட்டக்கூத்தர் தருக்கடங்கி யுறுதிகூடி யிருந்தனர் என் றுரைக்குப.

காலம்:—இனிப் புகழேந்திப் புலவரிருந்த காலமின்ன தென வரைந்து சுட்டுவாம். ஒரு சாரார் இவர் கம்பர் காலத் தினராதலின் "எண்ணிய சகாத்த மெண்ணூற்றேழன்மேல்," என்ற கம்பராமாயணச் சிறப்புப்பாயிரச் செய்யுளிற் கூறி யாங்கு இவரது காலம் இற்றைக்குச் சற்றேறக்குறைய ஆயி ரத்துப் பதினான்கு வருடங்களின் முன்ன ரென்பதாமென்ப. மற்றொரு சாரார் கம்பர் தங்காலம் சாலிவாகன சகாத்தம் 807-ஆம் யாண்டென்பது உண்மை வழியான் நோக்கு மிடத்து நிலைநில்லாது; யாங்ஙன மெனில் ஆங்கில மொழியின் கண் அச்சிட்டுப் போதரும் † இந்திய புராதன கலைஞன் என் னும் மாதாந்தப் பத்திரிகையினிடத்துக் கி. பி. 1063-ஆம் யாண்டினிறுதியிற் பட்டத்திற்குப் போந்த இராசேந்திர சோழ னிரண்டாவனென்ற குலோத்துங்க சோழன் முதலாவ னும், கி. பி. 1127-ஆம் யாண்டு அரசுரிமை யெய்திய குலோத் துங்க சோழ னிரண்டாவனு மென்ற ஈரரசர் கூறப்பட்டுளர்;

---

* "கொங்கைக்" என்பதூஉம் பாடம்

†The Indian Antiquary, Pages 296-299, October 1894

அவர் தம்முட் குலோத்துங்கசோழன் முதலாவனது காலமே. நமது கம்பர்தங் காலமுமேயா மென்பது பலர்க்கு மொப்ப முடிந்ததாம்; ஆகவே கம்பரது காலம் பதினோராம் நூற்றூண்டின் பிற்பகுதி யென்பது தானே போதரும்; இதனைத் தென்னிந்திய சிலாசாதன வாராய்ச்சிப் பத்திரிகையின் நான்காவது சம்புடத்தில் 205-ஆம் பக்கத்தின்கண்ணுங் காண்க வென்பாராயினர். இனிப் † பிஷப் கால்ட்வேல் துரை கூறுமாறு கம்பர் காலம் குலோத்துங்க சோழ னிரண்டாவன் காலமெனிற் படுமிழுக்கென்னை யென்று கூறுவ ரின்னொரு சாரார். இவை யாவற்றினும் நடுவட் கூறியோருடைய கூற்றே ஏற்புடைத்தாம் எனக்கொள்க. என்னை? "எண்ணிய சகாத்தம் எண்ணூற் றேழன்மேல்," என்பது இடையிற் சேர்க்கப்பட்ட சொருகு கவியேயா மென்பது, கம்பர் காலத்திருந்த வரசன் விசயாலய னென்பவனன்றிக் குலோத்துங்க னென்பதனுன் விளங்கும். இப்பாடலிற் குறித்த காலத்துப் பட்ட மெய்தியவன் விசயாலயானேயா மென்பது சிலாசாதன வாராய்ச்சியினுற் பெற்றும். இனிக் கம்பர் காலம் கால்ட்வெல் துரை வரையுமாறு கொள்ளத் தக்க தன்றென்பதுஞ் சிறிது தெரிப்பாம். கம்பரொட்டக்கூத்தரது காலங்களிற் சோழராசனது தலைநகராக உறந்தை தஞ்சைகளே கூறப்படுவனவாமன்றி அவற்றினின்றும் விலகி அரசனது வாசத்தானங் காஞ்சியாயிற்றென்பது கூறப்படாமையானும் குலோத்துங்கசோழ னிரண்டாவ னிருந் தரசாண்டது காஞ்சியே யாதலானும் பிறவாற்றுனும் அது புரையுடைத்தென்பது. கம்பர் ஒட்டக்கூத்தர் புகழேந்திப் புலவர் ஆகிய இம்மூவரு மொரே காலத்தினராகவே புகழேந்

† Bishop Caldwell.

திப் புலவரது காலம் கி. பி. பதினோராம் நூற்றாண்டின் பிற்பகுதியே யாமென்பது தேற்றம். இனி யாம் மேற்கூறிப் போந்த புகழேந்தியாரது வரலாற்றுள் இவருக்கும் ஔவை யாருக்குஞ் சில சம்பாஷணை நிகழ்ந்தனவாக வருதலின் ஔவையாரு மிவர்காலத்தினரேயோ வெனின்; அற்றன்று, ஔவையார் திருவள்ளுவரது உடன் பிறந்தாராதலானும், ஔவையாருந் திருவள்ளுவருங் கடைச்சங்கமிருந்த காலத் திருந்தவராதலானும், கடைச்சங்கத்தார் காலம் புகழேந்திப் புலவர் காலத்திற்குப் பன்னூற்றாண்டுகட்கு முற்பட்டதாத லானும், இவர் காலத்தினிருந்த ஔவை பிரசித்தி பெற்ற அந்த ஔவையாரல்லள்; ஔவையென்பது முதிய தவப் பெண்ணிற்கும் பேராமாதலின் அத்தகைய தவமுதியோள் யாரோடாயினும் புகழேந்திப்புலவர் சம்பாஷித்திருக்கவேண்டு மென்க. அற்றேல், ஔவையார் அதிகமான் நெடுமானஞ்சி யென்னும் அரசனிடமிருந்து அமிழ்தமய மானதொரு நெல்லிக்கனியைப் பெற்றுண்டமைபற்றி நெடுங்காலஞ் சீவித் திருந்தனரெனப் புறநானூறு, சிறுபாணாற்றுப்படை, திருக் குறள் பரிமேலழகருரை முதலியன வெல்லாம் முழங்காநிற் றலிற் கடைச்சங்கத்தார் காலத்து ஔவையாரும் புகழேந்தி யார் காலத்து ஔவையாரும் ஒருவரேயெனக் கோடலி யலாதோ வெனின்; நன்று கூறினாய்! மக்கட்கு விதித்த நூறு வயதினும் நெல்லிக்கனி யுண்டமையாற் சிறிது அதிகமாக வாழ்ந்திருந்தனரென்று கொள்ளல் கூடுமேயன்றிக் கி. பி. முத னூற்றாண்டினிருந்த ஔவையார் கி. பி. பதினோரா நூற்றாண் டினிறுதிகாறு மிருந்தனரென்று கூறப்புகுதல் பண்டிதர் குழுவிற் பழியுண்டாழியுமென் றறிக. இன்னுமிதன் விவரம் விரிப்பிற் பெருகும்.

இவரது சமயம் சைவமென்றொரு சாரார் கூறு நிற்ப, மற்றொருசாரார் வைணவமென்பர். இன்னொரு சாரார் இவர் அரனையும் மரியையு மொப்ப நினைக்கும் அத்துவைத சமயத்தினரெனக் கூறுவர். இவர் தமது நளவெண்பாவிற் கூறும் பாயிரத்துக் கடவுள் வாழ்த்துச் செய்யுட்களையும், காண்டந்தோறும் முதற்கட் கூறும் காப்புச் செய்யுட்களையும், அவை தம்முள் திருமால் துதிகளையெல்லாம் முன்னர்ப் பெய்திருத்தலையும், சுயம்வர காண்டத்து 47 ஆஞ் செய்யுளையும், கலிதொடர் காண்டத்து 33 ஆஞ் செய்யுளையும், திருநெய்த்தானத்துச் சிவபெருமானைப் பாடியபோது சிவபெருமானெனச் சுட்டாது 'நெய்த்தானத்தா' னெனப் பொதுப்படக் கூறியும், குறுங்குடித் திருமாலைப் பாடியபோது விசேடப் பற்றுக்காட்டு மாற்றலுள்ள சொற்களை யுபயோகித்துப் பாடியிருத்தலையும், தொண்டை மண்டல சதகமுடையார் இவரைக் கூறுமிடத்து, "மாலார் களந்தைப் புகழேந்தியும்" எனக் கூறியிருத்தலையு முற்றுநோக்குமிடத்து இவர் சிவநிந்தை செய்யாத வைணவரென லேற்புடைத்தாமென்பது. சிவநிந்தை செய்யாத வைணவரிலராலோவெனின் அற்றன்று. சிவநிந்தை செய்யாத வைணவர் சிலரை யிக்காலத்தும் யாம் கண்கூடாகக் காண்கின்றாமாக மதவாத மிகுந்திலா வக்காலத்திற் காண்டற்கென்னையென விடுக்க. அன்றியுமவர் அத்தகையராயிருப்பிற் சிவத்துதி செய்யவே மாட்டாரென்க.

இஃதிவ்வண்ணமிருப்பச் சிலர், நம் புகழேந்திப் புலவர் வைணவருள் வைணவராயிருந்தமை பற்றிச் சைவனாய பாண்டியன் அவரைத் தன் மகட்குத் தானமளித்த சீதன வரிசைகளுடன் அனுப்பிவிட்டனன்; அல்லாக்கால் அத்தகைய சிறந்த பாவலரை விட்டுப் பிரிதலை விரும்பமாட்டா

னென்றும், ஒட்டக்கூத்தப் புலவருஞ் சோழராசனுஞ் சைவர் களாயினமையானும், அவ் வொட்டக்கூத்தரோடிவர் முரணினமையானும், இவர் காவற் சிறையகத்திருந்தனரென்றும், இவரது வைணவ வியல்பே யிவரைச் சோழராசனிடத்தினின்றும் பிரித்துச் சந்திரன் சுவர்க்கியினிடத் துய்த்ததென்றும், அன்றே லிவரைச் சோழனுங் கைவிட்டிருக்கமாட்டானென்றும், தம்மைச் சில காலம் ஆதரித்த பாண்டிய சோழ ராசர்களை மகிழ்விக்குமாறுந் தம்மோடதுகாறும் பகைத்திறம் பூண்டிருந்த ஒட்டக்கூத்தர் சமயவேறுபட்டா லேதேனுங் குறை கூறாதிருக்குமாறும் உன்னியே தமது நளவெண்பாவிற் சிவத்துதிகளை யிடையே செறித்தனரென்றுங் கூறுநிற்பர். இதனானே நம் புகழேந்திப் புலவர் பட்ட பாட்டிற்கெல்லாம் காரணம் அவரது சமய வேறுபாடே யென்பது போதருமாதலின் அது பொருந்துமா றன்றென்ப துணர்க.

இனி யிவர் பட்ட பாட்டிற்குக் காரண மிவரது குணனே யென்க. இவர் சிறிது முன் வெகுளியுடையரே யன்றிப் பிறரியல் பறிந்து அவ்வவற்றிற்குத் தகவொழுகுந் திறமில்லாதவருமாயிருந்தார். இவ்விரண்டுமே யிவர்க்கு ஒட்டக் கூத்தரது பகைமையினையும், அதன் மூலமாகச் சிறைச்சாலைவாழ்க்கையினையும் விளைத்தன. இவைபற்றி யன்றே அவர் முரணூர்க்காவலன்பாற் சென்றதூஉ மென்க. தமிழிலக்கணவிலக்கியக் கடற்கரை கண்ட புலவரொருவர் தாம் ஒரு நாட்டுச் சமத்தான வித்துவானைப் பகைத்துக் கோடலாகாதென்ற சிறு விஷயத்தை யறிந்து கொள்ளாமற் போனது மிகவும் பரிதபிக்க விஷயமே.

---

# 3. வைத்தியநாத நாவலர்

வைத்தியநாத நாவலரென்ற இப்புலவர் பெருமான் தஞ்சாவூர் ஜில்லாவைச் சேர்ந்த நாகப்பட்டினத்திற் கடுத்த திவ்ய க்ஷேத்திரமாகிய கமலாலய மென்ற திருவாரூரைப் பிறப்பிடமாகக் கொண்டவர். இவர் ஸ்ரீவன்மீகநாத தேசிகருடைய குமாரர். இந்த வன்மீகநாத தேசிகர் கவிபாடுந் திறத்தில் மிகச் சிரேட்ட ரென்பதற்குச் சிறிதுஞ் சந்தேகமில்லை. இவர், "தமது பாவன்மையாற் பரிசுபெற்ற சூனம்பேட்டை மானியமும் உப்பளமும் நாளது வரைக்கும் அவர் சந்ததியார் அநுபவித்து வருகின்றார்கள்," என்று மகா-ா-ா-ஸ்ரீ சி. வை. தாமோதரம் பிள்ளையவர்க ளெழுதுகிறார்கள். இவ்வாறு தந்தையாருஞ் சிறந்த வித்வானா யிருந்ததனாலன்றோ புத்திரரும் சுபாவ நியமத்தின்படி யங்ஙனம் தோன்றினர். * இப்போது, மன்னார்குடித் தாலூக்காவைச் சேர்ந்த திருக்களரென்னு மூரில், மிக வயோதிகரா யிருக்கின்ற ஸ்ரீமத் சூரியமூர்த்தி தேசிகரென்பார் நமது வைத்தியநாத நாவலருடைய ஆறாவது சந்ததியாராம்.

இவர் 17-ம் நூற்றாண்டின் இறுதியிலும், 18-ம் நூற்றாண்டின் தொடக்கத்திலு மிருந்தவர். இவர் இக்காலத்திலே தா னிருந்தாரென்பதைப் பற்றி வரைந்து சுட்டுவோம். இராமநாதபுரத்தில் கி. பி. 1685-ம் வருஷ முதல் 1723-ம் வருஷம் வரைக்கும் அரசாண்ட இரகுநாத சேதுபதியின் வாசல் வித்வானாயிருந்த படிக்காசுப் புலவர் நமது நாவலரிடங் கல்வி கற்ற மாணாக்கராம். ஆகவே நாம் மேலே சொல்லிய காலக்

---

* இவ்வியாசம் 1892 வருஷத்தில் எழுதப்பட்டதென்பது மனங்கொளத்தகும்.

கணக்குத் தவறில்லை யென்பது நன்ருய் விளங்கும். படிக்காசுப் புலவர் இவருடைய மாணுக்க ரென்பதற்கு ஆதாரமாக,

"கூடுஞ் சபையிற் கவிவா ரணங்களைக் கோளரிபோற்
சாடுஞ் சதாசிவ சற்குரு வேமுன்னுன் தந்தைதம்மாற்
பாடும் புலவர்க ளானேமின் றிச்செம்மற் பட்டியெங்குங்
காடுஞ் செடியுமென் ஞேதமிழ்க் காரிகை கற்றதுவே,"

என்று படிக்காசுப் புலவரேபாடிய செய்யுளைக்கொள்க. மேலும் நாம் முன்னே ஸ்ரீமத் சூரியமூர்த்திதேசிகர் இவரது ஆருவது சந்ததியாராமென்று குறித்த விஷயம் மேற்கூறிய காலக் கணக்கை யேகதேசம் வற்புறுத்துகின்றது.

வைத்தியநாத நாவலருடைய மதமோ சைவ மதம். இவர் சப்த விடங்க க்ஷேத்திரங்களிலே யதிகப் பிராதாநியத்தை யடைந்த திருவாரூரிலே அபிஷேகஸ்தர் மரபிலே சிறப்புற் ருேங்கியவர். இவர் ஓர் அருமையான வித்வானென்று சொல்வதற்கு ஐயமே யில்லை. இவர் மலையாளத்து இராசாவின் பேரிற் சில பிரபந்தங்கள் பாடி, அவ்விராஜனிட மிருந்து கிராமங்களும், வேறு சில பரிசுகளும் அளிக்கப் பெற்றவர். மேலுமிவர் இலக்கணக் கொத்து நூலாசிரியராகிய சுவாமிநாத தேசிகரால், "திருவா ரூரிற் றிருக்கூட் டத்திற் றமிழ்க்கிலக் காகிய வைத்திய நாதன்" என்றும், கவி வீரராகவ முதலியாரால்,

"ஐம்பதின்மர் சங்கத்தா ராகிவிடா ரோநாற்பத்
தொன்பதின்ம ரென்றே யுரைப்பாரோ—இம்பர்புகழ்
வன்மீக நாதனருள் வைத்தியநா தன்புடவி
தன்மீதங் நாட்சரித்தக் கால்,"

என்றும் புகழப் பெற்றவர்.

இத்தகைய நம்புலவர் சிகாமணி, சோழ நாட்டிலேயுள்ள ஆமாத்தூர் என்ற மாதை யென்னுமூரி லிருந்துகொண்டு சிற்றரசு புரிந்த குறுநில மன்னனாகிய திருவேங்கட சுவாமியென்பவரால் ஆதரிக்கப்பட்டுப் பரிபாலனஞ் செய்யப்பெற்றவர். இந்த விஷயமானது நமது வைத்தியநாத நாவலருடைய மூத்த குமாரராகிய சதாசிவ நாவலரால்,

"வேதியர் திலகன் விரவலர் கோளரி
மாதைய ரதிபன் வரகுண மேரு
கல்விக் கெல்லை கருணைக் காகரம்
பெருமாண் மெய்த்தவப் பேறெனத் தோன்றிய
திருமா லுலகஞ் செவ்விதிற் புரக்கு
மேதகு புகழ்த்திரு வேங்கட நாதன்
ஓதினனாக,"

என்று இலக்கண விளக்கச் சிறப்புப் பாயிரத்திற் கூறப்பட்டிருப்பதனாலே யினிது விளங்குகின்றது.

வைத்தியநாத நாவலரியற்றிய பிரபந்தங்களாவன. இலக்கண விளக்கமும், பிரபோத சந்திரோதயமும்,* வேறு சில சிறு நூல்களுமாம். இவர் மேலே சொல்லிய இரண்டு பெரிய பிரபந்தங்களையும் மாதை மன்னவன் திருவேங்கட நாதனுடைய வேண்டுகோளிற் கிணங்கியே செய்தனர். இலக்கண விளக்க

---

* இவ்வியாச மெழுதிய ஆசிரியரே தமது 'தமிழ் மொழி வரலா'ற்றில், "தருமபுர வாதீனத்தைச் சார்ந்த வைத்தியநாத தேசிகர் 'குட்டித் தொல்காப்பியம்' எனப்படும் 'இலக்கண விளக்கம்' இயற்றினர். இவருதவிகொண்டு மாதைத் திருவேங்கட மன்னன் வடமொழியிற் 'கிருஷ்ண மிசிரன்' செய்த 'பிரபோத சந்திரோதயம்' என்ற நாடகத்தைக் காப்பிய ரூபமாயமைத்தனன்," என்று எழுதியிருப்பது ஈண்டுச் சிந்திக்கற் பாலது.

மானது, அங்ஙனஞ் செய்யப்பட்டதற்கு, மேலே யந்நூற் சிறப்புப் பாயிரத்தினின்றும் நாமெடுத்துக் காட்டின பாகமானது தக்க சான்று பகரும். இங்ஙனமிது நிற்க, மெய்ஞ்ஞான விளக்க மென்று மறுநாமத்தையுடைய பிரபோத சந்திரோதயம் நமது நாவலரை யாதரித்துவந்த திருவேங்கட நாதரால் இயற்றப்பட்டதென்று கூறி மயங்குவாருமுளர். இவ்வாறு அவர்கள் பிராந்தியடைந்ததற்குக் காரணமென்ன வென்று சற்று விசாரித்துப் பார்ப்போமானால்,

"போதத் தமிழ்க்கும் வடகலைக்கும்
புலவோர் தமக்கும் பொருள்விரித்துச்
சீதைக் கிறைவ னெனநீதிச்
செங்கோல் செலுத்தித் திசைபுரந்து
வேதப் பனுவன் மெய்ஞ்ஞான
விளக்கா னுலகை விளக்குமெங்கள்
மாதைத் திருவேங் கடநாத
மறையோன் வாழி வாழியவே,"

என்ற ஒரு விருத்தமேயென்பது வெளிப்படும். ஆகவே யவர்களது மயக்கத்தைக் கொஞ்சந் தெளியவைத்தல் வேண்டியது ஆவசியகம். இந்தப் பிரபந்தமானது திருவேங்கட நாதர் வேண்டுகோளின்படி வைத்தியநாத நாவலரியற்றினரென்று முன்னே கூறியிருக்கின்றோமாகவே, வேங்கடநாதர் ஏவுதற் கருத்தாவும், நாவல ரியற்றுதற் கருத்தாவு மாவார்கள். மேலும் மேலே சொல்லிய செய்யுளில், "மெய்ஞ்ஞான விளக்கா னுலகை விளக்கும்," என்ற தொடர்க்கு, அவர் பிரயோச்சியனுய் மாத்திரமிருந்து விளக்குவித்தாரென்ற அந்தர்ப்பாவிதணிச்சாய்ப் பொருள் கொள்ளலாமாகப், பிரயோசகனுய் நின்று விளக்கினாரென்று பொருள் கொண்டது, சமயோசிதமாகச் சொற்பொரு

ளுணருமாற்ற லில்லாமையினுலேதானென்க. இதுவு மல்லா மற் சென்னையிலிருந்த வித்துவான் தாண்டவராய முதலியா ருடைய பிரபோத சந்திரோதயப் பிரதியில் நாவலரியற்றின தாகக் குறிக்கப்பட்டிருப்பதனுலும், மதுரை, நெல்லை, புதுவை முதலிய விடங்களிற் கன்ன பரம்பரையாக நாவலரியற்றினு ரென்று வழங்குவதனுலும், யாங்கூறுவதே திருவாரூர் அபி ஷேகஸ்தர்கட்கும் தருமபுரவாதீனத்தார் முதலாயினுர்க்கு மொப்ப முடிந்ததா மாதலாலு மவர்தேடிய ஆதாரமவரையே தியங்கவிட்டதென்று கொள்ளல் வேண்டியதாகின்றது. இம் மயக்கம், தவரு யச்சிடப்பட்ட மூலம் பற்றி யுற்பத்தியானது போலும்.

இனி இலக்கண விளக்கத்தின் குணத்தைப்பற்றிப் பேசு வோம். எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி யென்று சொல்லுகிற ஐந்து பாகங்களுமடங்கிய வியாகரணங்கள் தமி ழிற் கிடைப்பதரிது. கிடைத்தாலு மொருவேளை யதிகமாய் விரிந்திருக்கு மில்லாவிடில் மிகச் சுருக்கமாயிருக்கும். இவ் விரண்டு குற்றமுமில்லாமல், மாணுக்கர்க்குப் போதுமான அள வினையுடையது இலக்கண விளக்க மொன்றேயாம். அன்னுர் தம் தமிழாராய்ச்சிக்குத் தொல்காப்பிய வுணர்ச்சி யதிக ஆவ சியகமில்லை யென்பது சொல்லாமலே விளங்குமாதலாலும், சான்ருேரிதற்குக் "குட்டித் தொல்காப்பிய"மென்று பெயரிட் டிருக்கின்ருர்களாதலாலும், இஃது ஒரு சிறந்த வியாகரண மென்பதற்கு ஆக்ஷேபனையில்லை யாதலாலும், இதையே படித் தாற் போதுமென்பது பெறப்படுமென்க. நாவலர் தொல் காப்பியர்போல யாப்பையு மணியையும் பொருளதிகாரத்தி லடக்கி மூன்றதிகாரமாக்கினுர். எழுத்திலுஞ் சொல்லிலும் பெரும்பாலும் நன்னூலைத் தழுவியே யெழுதப்பட்டிருக்

கிறது. நன்னூலிற் குற்றமெனக்கண்ட சில வற்றைத் திருத் தியு மெழுதி யிருக்கிறார். அநேக சூத்திரங்கள் நன்னூலார் சூத்திரங்களாகவே காணப்படுகின்றன. பாயிரமொழிந்த 407 நன்னூற் சூத்திரங்களையும் 372 விதிகளி லடக்கிவிட் டார். பாயிரத்திற் கூறிய 55 விதிகளையும் பொருளதிகாரத்துப் பாட்டியலில் 129 முதல் 142 வரைக்குமுள்ள 14 விதிகளி லடக்கி விட்டார்.

இனி மூன்றாவதாகிய பொருளதிகாரத்தில், முதலிய லாகிய அகத்திணையியலில் மிகுதியும் நாற்கவிராஜ நம்பி செய்த அகப்பொருள் விளக்கத்தையும், தொல்காப்பிய வகத்திணையியலையு மநுசரித்தே சூத்திரஞ் செய்திருக்கிறார். இரண்டாவ தியலாகிய புறத்திணை யியலில் ஐயனாரிதனார் புறப்பொருள் வெண்பா மாலையை யநுசரியாது தொல்காப் பியத்தையே யநுசரித்திருக்கிறார். மூன்றாவ தியலாகிய அணி யியலானது தண்டியலங்காரத்தையே யநுசரித்தெழுதப்பட் டிருக்கிறது. அநேக சூத்திரங்கள் தண்டியார் சூத்திரங்க ளாகவே காணப்படுகின்றன. உதாரணச் செய்யுட்களும் அதினின்றே யெடுத்து ஓதப்பட்டிருக்கின்றன. ஆகவே தண்டியலங்காரத்திற்கு உரையானது வைத்தியநாத நாவ லர்க்கு முன்னரே யெழுதப்பட்டிருத்தல் வேண்டும். இனி நான்காவ தியலாகிய செய்யுளியல் யாப்பருங்கலத்தைத் தழுவி யெழுதப்பட் டிருக்கின்றது. ஐந்தாவ தியலாகிய பாட் டியலில் முதல் 128 சூத்திரம் வரை, வச்சணந்தி மாலை, சிதம் பரப் பாட்டியல் முதலிய நூல்களின் தாற்பரியங்களிற் சில எழுதப்பட்டுள. 128 முதல் 142 வரை நன்னூலார் பாயிரமா யொழிய, 142 முதல் 181 வரை தொல்காப்பிய மரபியலி னிறுதியாகின்றது. இது 941 சூத்திரங்களையுடையது.

இனி, நம் நாவலர் சூத்திரஞ் செய்ததோடே நில்லாமல், இதற்குரையும் எழுதினர். இந்த மாதிரியாக நூலாசிரியரே யுரையு மெழுதுகிற வழக்கம் தமிழிற் கிடையாது.

இவர்தாம் முதன் முதலில் இவ்விதமாக உரையையு மெழுதத் தொடங்கினர். இவரைப் பார்த்துப்பிற்காலத்தார் சிலரும், தங்கள் தங்கள் நூற்கு உரை எழுதியிருக்கிறார்கள். இவர் தமது உரையிற் பிறர்மதங்களைக் கண்டிப்பது வழக்கம். தொல்காப்பிய விதிகளிற் சிலவற்றை உரையிலே தழீஇயினர். தொல்காப்பிய வுரைகளில் நச்சினார்க்கினியத்தையே இவர் அதிகமாகக் கையாடியிருக்கிறார். மேலும் அகத்திணையிய லில் தொல்காப்பிய வுரையிற் காணப்பட்ட சில விஷயங் களைச் சூத்திரங்களாக வகுத்தார். அணியியலில், தண்டிய லங்கார வுரையிற்கூறிய சில பிரிவுகளை விதியிலே இவர் கூறினர்.

பாட்டியல் 181 சூத்திரங்களும் நமது நாவலரால் எழு தப்படவேயில்லை. இந்த இயலானது வைத்தியநாத நாவல ருடைய 2-வது குமாரராகிய தியாகராச தேசிகராற் சேர்க்கப் பட்டது.

இந் நூற்குப்பாயிரமும், சொல்லணிச் சூத்திரங்களும் நமது நாவலருடைய மூத்த குமாரர் சதாசிவ தேசிகராற் செய் யப்பட்டன.

ஆகையினாலே இவர் சொல்லணியும் பாட்டியலும் மிகப் பயன்படத் தக்கனவல்லவென்று விடுத்து விட்டார். மேலுந் தற்கால மாணவர்க்குச் சொல்லணியும் பாட்டியலும் வேண்டு வதின்று. ஆகவே 941 விதிகளில் 207 விதிகள் நாவலராற் செய்யப் படவேயில்லை, பயனின்மையால்; ஆதலால் எஞ்சி

யுள்ள 734 விதிகளுமே மாணுக்கர்கட்கு நிரம்ப உபயோக மானவை.

இது கிடக்க: திருவாவடுதுறைச் சிவஞான சுவாமிகள் நாவலருடைய இலக்கண விளக்கத்தை யவிக்கும் பொருட்டுச் சூருவளியையேவினர். இச்சூருவளியை "அநியாய கண்டன" மென்று மகா-ா-ா-ஸ்ரீ சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் கூறியதுபோல் நாம் ஒருகாலத்தும் சொல்லப்படாது. இக் கண்டனத்தை யவர் வேண்டுமென்று எழுதினபோதிலும், சில இடங்களில் நமது நாவலர் செய்த பிழைகளையு மெடுத் துக் காட்டியிருக்கின்றனர். சூருவளியின் மூலமாயே நம் இலக்கண விளக்கத்திற்கு அதிக மேன்மை யென்று யாவரும் அறிதல் வேண்டும்.

இனி இரண்டாவதான மெய்ஞ்ஞான விளக்க மென்ற பிரபோதசந்திரோதய மென்ற நூலைப் பற்றிப் பேசுவோம். ஆங்கிலேயத்தில் (Allegory) என்பதற்குச் சமானமாக இயற்றப்பட்டுள்ள இந்நூல், முதன் முதலில் வடமொழியில் நாடக ரூபமாகக் கிருஷ்ண மிச்சிரன் என்றவராற் செய்யப் பட்டுளது. அதை மொழிபெயர்க்கப் புகுந்த நமது ஆசிரியர் நாடக ரூபத்தை யொழித்துக் காவிய ரூபமாக எழுதியது யாது காரணம் பற்றியோ அறிகிலேம். வேதாந்தமாகிய பாற்கடலை நாவலர் தமது அறிவென்ற மந்தரமலையை மத்தாக நாட்டிக் கடையவே பிரபோத சந்திரோதயமாயிற்று.

இந்தப் பிரபந்தமானது பாயிரமுட்பட 48 சருக்கங்க ளடங்கியது. இதில் 2012 செய்யுட்கள் உள. இது விருத்தப் பாவினற் செய்யப்பட்டிருக்கிறது. இதன் விஷய மின்ன தென்று கொஞ்சஞ் சொல்லுவோம்.

மாயை யென்றவள் பிரம்ம சந்நிதானத்திலே விகாரம் புரிந்து கர்ப்பமடைந்து மானதன் என்ஞெரு புத்திரனைப் பெற்ருள். அவன் பிரவிர்த்தி, நிவிர்த்தி என்ற இரண்டு மாதர் களையும் கலியாணஞ் செய்துகொண்டான். மானதனுக்கு மூத்த மனைவியாகிய பிரவிர்த்தியினிட மிருந்து மோகன், அகங்காரன், மதனன், இடம்பன் முதலாகிய அநேக புத் திரர்களும்; தீவினை, கபடி என்ற இரண்டு புத்திரிகளும் பிறந்தார்கள் ; இனி இளைய மனைவியாகிய நிவிர்த்தியினிட மிருந்து விவேகன், நிருபகன், பொறுமை, முதலான பல குமாரர்களும் மயித்திரி, கருணை முதலிய சில பெண்களும் பிறந்தார்கள். இவ்விருதிறத்துப் பிள்ளைகளுக்கும் பாட்டியா கிய மாயை யென்பவள் அவரவர்களுடைய குணங்களுக்கு ஏற்றபடி விவாக மகோற்சவம் நடத்தி வைத்தாள். பிர விர்த்தியின் மக்கள் அசுரர்களைப் போலவும் நிவிர்த்தி யின் மக்கள் தேவர்களைப் போலவும் வளர்ந்து வந்தார் கள். பிற்பாடு இவ்விரு பகுதிப் பிள்ளைகளுந் தங்களுக் குள் மாறுபட்டு மோகன் அரசாளும்படியும், விவேகன் காட் டிற்குப் போகும்படியும் நேரிட்டது. பிறகு விவேகன் குலம் விளங்கப் பிரபோதன் தோன்றித் தானை கூட்டி, யுத்தத்திற் குச் சென்று மோகன் முதலானவர்களை யெல்லாம் மூல தோஹாநியாக்கி விட்டான். பிறகு பிரபோதன் முடி சூட் டப்படுகின்ருன். இஃதுடன் காவியம் முடிகின்றது. இதை யெழுதியபோது நாவலர் மனத்திற் குருக்ஷேத்திர யுத்தத் தைப்பற்றி நினைத்துக் கொண்டிருந்திருக்க வேண்டும் என்று தோன்றுகின்றது. பிரபந்தத்தின் நடை வெகு நளினமாயும், ஒழுகிய ஓசையோடு கூடியதாயு மிருக்கின்றது. படிக்கும் போதே நிரம்ப இன்பமளிக்கக்கூடியதாகவும் காணப்படுகின்

றது. இந்த மாதிரியான பிரபந்தங்கள் நந்தமிழிற் கிடைப்பது மிகவுமருமை. இதிலே * "கனஞ்சடையென் றுருவேற்றிக் கண்மூடிக் கதறுஞ்" சாஸ்திரிமாருடைய துர்க்குணங்களை மிகுதியும் கண்டிக்கின்றார். மனிதர்களுக்குச் சற்குணாபிவிர்த்தி யுண்டாதல் வேண்டுமென்ற நோக்கத்துடனேயே இவரிதை யெழுதியிருக்கிறாரென்று நினைப்பதற்குக் கொஞ்சமும் சந்தேகமில்லை. சாஸ்திரிமார்களுடையவே யன்றிப் பற்பல மடங்களிலுள்ள தம்பிரான்களுடைய தீயொழுக்கத்தையும் நன்கு கண்டிக்கிறார். இக்காவியத்திற் காணப்படுகிற ஒவ்வொருவரும் அவரவருடைய குணங்களுக்குத் தக்கபடியே பேசுகிறார்கள். தங்கள் குணங்களோடு சாமஞ்சஸப் படாத வார்த்தைகளை யொருவரும் பேசவேயில்லை. இப்பிரபந்தமானது சில விடங்களிற் பரிகாச நடை (Sarcastic Style) யோடு எழுதப்பட்டிருக்கிறது. இதில் ஒவ்வொரு கவியும் ஆழ்ந்த நுண்ணிய பொருளை விளக்குகின்றது. பெரும்பாலும் செய்யுட்களெல்லாம் வெகு சுகமாக அமைந்திருக்கின்றன. சமயோசிதமாகப் பதங்களும் பிரயோகிக்கப்பட்டிருக்கின்றன. இவர் செய்யுட்களிற் பாட்டை நிரப்பும் பயனைத்

---

* கனஞ்சடை யென்றுரு வேற்றிக் கண்மூடிக்கதறுஞ் சாத்திரிகள் பலரின் துர்க்குணம்:—இதைக் கண்டு பலர், துர்க்குணமென்றே நினைக்கக் கூடும்; அற்றன்று; வேதத்திற் கூறிய பொருள்களை யின்னவெனவறியாது, கனம், சடை என்று, மூல பாடத்தை மாத்திரம், முற்கி, முனைந்து, உருவடித்துத் தமக்கு வேதங்களனைத்தும் கைவந்ததாக எண்ணித்தருக்கும் சாத்திரியார்களின், துர்க்குணமொன்றே, ஈண்டுக் கண்டிக்கப்பட்டமையறிக. பொருளையறிந்து உருவிடுதல் எக்காலத்தும், எத்தேயத்தும், எவர்க்கும் நன்மை பயப்பதாம்.

தவிர்த்து வேறு ஒருபயோகமுமில்லாத சொற்களைக் காணுதல் மிகவுமரிது. எதுகை, மோனைகளுக்காகச் சொற்களை விகாரப்படுத்தும் விகாரகுணம் இவரிட மதிகமாகக் கிடையாது. வகையுளி, வனப்பின்மை முதலிய தோஷங்கள் இந்நூலிற் கிடையா. இத்தன்மையான சிறப்பெல்லம் பற்றியல்லவா, சில காலத்திற்கு முன் இதினின்றுமொரு பாகமானது நமது சென்னைச் சர்வகலாசாலையில் பி. ஏ. பரீட்சைக்குப் பாடமாக நியமிக்கப்பட்டது மென்பது யாவர்க்குந் தெரிந்த விஷயம். இனிக் கடைசியாக நமக்கும் நம்முடைய தமிழ்ப் பாஷைக்கும், வைத்தியநாத நாவலர் மூலமாக ஒரு கௌரவம் ஏற்படுகின்றது என்பது எமது துணிவு.

---

## 4. சுப்பிரமணிய தீக்ஷிதர்

சுப்பிரமணிய தீக்ஷிதரெனப் பெயர் பெற்ற இந்த மகா வித்துவான் பாண்டி வளநாட்டில் ஒரு பகுதியாகிய திருநெல்வேலி ஜில்லாவைச் சேர்ந்த ஆழ்வார் திருநகரி என்னும் திவ்ய க்ஷேத்திரத்திலே பிறந்தவர். இவர் இளமைப் பருவத்திலேயே வித்தியாரம்பஞ் செய்விக்கப்பெற்று வடமொழி தமிழ்மொழியென்று சொல்லப்படு மிரண்டு பாஷைகளினும் மிக்க வல்லுநராகி, "எழுகடல் குடித்த விழுமிய தவவலி, யுத்தம முனிவரன்," என்று கற்று வல்ல சான்றோர் பலராலும் புகழப் பெற்றவர்.

இவர் சற்றேறக்குறைய நூற்றெண்பது வருடங்கட்கு முன்னே இருந்தவர். இவரிருந்த கால மிதுவே யென்று நியாயங் காட்டி நிலைநிறுத்துவோம். முன்னம் வைத்தியநாத நாவலரிருந்த காலம் 18-ம் நூற்றாண்டின் தொடக்கமென

வரைந்து சுட்டினேம். அவ்வைத்தியநாத நாவலரும் திருவா வடுதுறைச் சுவாமிநாத தேசிகரும் ஏககாலத்தவர் என்ப தற்கு,

"என்கண் காணத்
திருவா ரூரிற் றிருக்கூட் டத்திற்
றமிழ்க்கிலக் காகிய வைத்திய நாத
னிலக்கண விளக்கம் வகுத்துரை யெழுதினன்,"

என்று சுவாமிநாத தேசிகரே கூறுதலினுலே யாதாரமாகும். பின்பு சுவாமிநாத தேசிகரும் நம் சுப்பிரமணிய தீக்ஷிதரும் நண்பர்களாமாகவே அப்பதினெட்டாம் நூற்றுண்டின் தொடக்கத்திலிருந்தவரென்று அநுமானித்தற்கு இடனிருத் தல் காண்க. ஆகவே மேற்கூறிய மூவரு மொரே காலத்தவர்க ளென்பது நாட்டப்பட்டது. நம் தீக்ஷிதரும் சுவாமிநாத தேசிகரும் நண்பர்களென்பதற்கு அத்தாட்சியாக,

"அன்றியுந் தென்றிசை யாழ்வார் திருநக
ரப்பதி வாழுஞ் சுப்பிர மணிய
வேதியன் றமிழ்ப் பிரயோக விவேக
முரைத்துரை யெழுதினன்,"

என்று சுவாமிநாத தேசிகரே கூறியதைக் கொள்க.

சுப்பிரமணிய தீக்ஷிதருடைய மதமோ சைவமதம். இவர் மகா சைவப்பிராமண குலத்திற் பிறந்தவர். இவர் தம் நூலைத் தொடங்கும்போது "நீர்கொண்ட சென்னி மகேச்சுரன்," எனத் தெய்வ வணக்கங் கூறி மேற் செல்லுதலி ஞலே யிவர் சைவ வேதியரெனக் குறிப்பிக்கப்பட்டார். இவர் அந்தணுளரிலும் போதாயந சூத்திரத்தைச் சேர்ந்தவர். இதற்குத் தீக்ஷிதரவர்களே தம்மைப் பிறர்போலும் நாந்தி கூறிய,

*"பெரும்புங் கவர்புகழ் போதா
யனிசுப் பிரமணிய
னரும்புங் குருகையிற் கோதில்
குலோத்துங்க னிடமாய்
விரும்பும் பொருளைத் தரும்பிர
யோக விவேகந்தன்னைக்
கரும்புங் கனியு மெனப்பாடி
னன்றமிழ் கற்பவர்க்கே,"

என்ற காரிகையே தக்க சான்று பகரும்.

இவ் வேதியவையாகரணியும் † மேலே சொல்லிய சுவாமிநாத தேசிகருஞ் செப்பறைப்பதிக் கனகசபாபதிசிவாசாரியாரிடத்தினின்றுங் கீர்வாணபாஷை யொருங்குகற்ற சகபாடிகளென்று கர்ணபரம்பரையாகக் கேள்விப்படுகிறோம். இவர் 'வேளாளன் கிரந்தமும், பார்ப்பான் தமிழும் வழ வழவே' யென்று வழக்கமாகக் கூறப்படும் பழமொழியைப் பொய்ப்படுத்துமாறு தோன்றினர் போலும். பிராமணர்களுக்குள் அந்நூற்றாண்டில் தமிழ் கற்றவர் கிடைப்பது மகா துர்லபம். அப்படியேயிருப்பினும் வடமொழிப் பயிற்சி தமிழ் மொழிப் பயிற்சியாகிய இவ்விரண்டு மொருங்கு பெற்றவர் கிடைப்பது கேவலம் துர்லபம். இங்ஙனமாக இவ்விரு பயிற்சியும் நிரம்ப அடைந்தவராகிய நம் தீக்ஷிதேந்திரர் சாமர்த்தியம் இனைத்து என்று யாவரால் அளந்துரைக் கற்பான்மையது?

இவ் வொப்புயர்வில்லா வேதியர் திலகர் இவ்வாறு புகழ்ந்துரைக்கப்படுதற்கு யாது செய்திருக்கின்றனரென்று

---

* பாயிரம் † வியாகரணத்தைப் பயில்கிறவனும் அறிந்தானும் வையாகரணி என்னப்படுவர்.

ஓர் சங்கை * யேற்படுமேல் அதற்கு உத்தரங் கூறுகின்றோம். இவர் 'பிரயோக விவேகம்' என்னும் நாமதேயமிட்டு ஓரருமை யான வியாகரண சாஸ்திரம் † செய்திருக்கின்றனர். இதில் சம்ஸ்கிருத பாஷைக்கும் திராவிட பாஷைக்கும் பொதுவாக ஏற்பட்ட சப்த சாஸ்திரத்தின் தத்துவங்கள் ‡ தமிழ் பயில் வார் யாவருமெளிதில் உணரும் வண்ணம் கூறப்பட்டிருக் கின்றன. இது கட்டளைக் கலித்துறை யாப்பினுல் ¶ பாடப் பட்டிருக்கின்றது. இதில் ஐம்பத்தொரு கலித்துறைகளுள. இஃது,

"உம்பர்க் குரியபிர யோக விவேகத்தை
யைம்பத் தொருகவிதை யாலுரைத்தான்—செம்பொற்சீர்
மன்னு மதிற்குருகூர் வாழ்சுப் பிரமணிய
னென்னு மொருவே தியன்,"

என்ற அந் நூற் சிறப்புப் பாயிரத்தானே விளங்கும்.

இந்நூல் சுவாமிநாத தேசிகருடைய வேண்டுகோளிற் கிணங்கியே செய்யப்பட்ட தென்ப.

இனியிப் 'பிரயோக விவேக'த்தின் குணகுணங்களைப் பற்றிப் பேசுவோம். இவ்வரிய இலக்கணம், காரகப் படலம், சமாசப் படலம், தத்திதப் படலம், திங்குப் படலம் என நான்கு படலங்கள் அடங்கியது. இவ்விலக்கணத்தின் அருமையும் பெருமையும் உண்மையும் நுண்மையும் எம்மாலெடுத்துரைக் கற் பெற்றிய வல்லவேனும் ஏகதேசம் இயன்றமட்டுங் கூறு வோம். இவ்விலக்கணமானது தமிழிலக்கணத்திலும் வட மொழியிலக்கணத்திலும் மிகத் தேர்ந்தார்க்கன்றி வேறியாவர்க் கும் பயன்படாதென்று சிலர் யோசனையின்றிச் சொல்லக்

* Question † Grammar ‡ Truths of Grammar ¶ Metre

கூடும். அவர் அப்படிச் சொல்லுதல் அவருடைய அறியாமையேயென விடுக்க. இவர் இந்நூற்கு உரையுந் தாமே யெழுதினர் வடமொழி வழக்கம் பற்றி. இஃது, "வடநூலார் தாமே பதிகமும் உரையுஞ் செய்வார். இந்நூலும் வடநூலைத் தற்பவமாகச் * செய்தலான், யாமும் பதிகமும் உரையும் செய்து, உதாரணமுங் காட்டினும்," என்று தீக்ஷிதரே மூன்றுங் காரிகையினுரையின்கீழ் வரைதலின் நன்கு விளங்கும். இது † பாஷா தத்துவ சாஸ்திர ரீதியாக அமைந்துள்ளது. ஆங்கில பாஷா வியாகரண தத்துவார்த்தங்களை ‡ யாய்ந்துணர்ந்த கல்விமான்களுக்கு இதன் பெருமை சொல்லாமலே விளங்கும். இவர் இடையிடையே வெளியிடும் கொள்கைகளெல்லாம் சொந்தமாகவும், அதிகமாய் ஆழ்ந்த கருத்தினவாகவும் காணப்படும். உதாரணமாக இவர் தமிழிலக்கணமெல்லாம் பிராயிகம் வடமொழியிலக்கண வழியென்றே கூறுவர். இக்கொள்கையின் உண்மையினை ¶ "வடமொழி தென்மொழியினியைபு" என்ற உபந்நியாசத்தில் விரித்து இலக்கண தர்க்க சகிதமான யுக்தியோடு நியாயங்காட்டி ஊர்ஜிதப்படுத்தி யிருக்கிறோம். ஆண்டுக் கண்டுணர்க. இது நிற்க.

---

* சிறுபான்மை வேறுபடுத்தி † Science of Language
‡ The real meaning of the truths of English Grammar.

$ பிராயிகம் - பெரும்பாலும். ¶ 'இந்த உபந்நியாசமானது மகா-ா-ா-ஸ்ரீ. எம். சேஷகிரி சாஸ்திரியாரவர்கள் எம். ஏ. சபா நாயகராக வீற்றிருந்தபொழுது வாசிக்கப்பட்டது. அது அச்சிடப்படுகின்றது. சீக்கிரம் வெளிவரும்.' (என்று விவேக சிந்தாமணி Vol. I பக்கம் 204-ல் எழுதப்பட்டிருக்கிறது. ஆனால் அது இது வரையில் அகப்படவில்லை. அவ்வுபந்நியாசத்தைக் கொடுப்பவற்கு எம்முடைய மனமார்ந்த வந்தனம் உரித்தாகும்.)

இவருடைய கலித்துறைகளெல்லாம், "இழுமெனு மொலியி னெழுகுறு மருவிபோற்" செவ்வனே யமைந்திருக்கின்றன. இதன் விதிகளெல்லாம் "காரிகை"களாதலின் மகடூஉ முன்னிலையவா யிருக்கின்றன. காரிகைகளைப் படிக்கும்போதே யாநந்தம் ஜனிக்கின்றது. காரிகையால் இலக்கணமெழுதுவதில் இவ்வளவு கைவந்தவர்கள் கிடைப்பது மிகவும் அருமையென்பது தேற்றம். இவர் உரை வகுக்கும் சாமர்த்தியமோ அற்புதம்! அற்புதம்!! அதிக யுக்தி புத்தியோடும் எழுதப்பட்டிருக்கிறது. இதில் அவருடைய * தர்க்க சாஸ்திர வலிமை நன்கு வெளிப்படும். உரையிலே யாங்காங்கு அவர் காட்டும், விசேஷக் குறிப்புக்களும், பூர்வ உரையாசிரியர்களாகிய இளம்பூரணர், நச்சினார்க்கினியர், சேனாவரையர் முதலாயினாருடைய மதங்களை மணமழியச் செய்யுங் கண்டனங்களும் வெகு நேர்த்தியவாயும் நடுவுநிலைமையவாயு மிருக்கின்றன. இவர்தம் உரையில் இடையிடையே தாமே யியற்றிய அழகாயமைந்த அநேக உரைச் சூத்திரங்களை எளிதில் விளங்குதற் பொருட்டுச் சேர்த்திருக்கிறார். அவை யெம்போலியர்க்கு மிகப் பயன் படத்தக்கனவாகக் காணப்படுகின்றன. இப்பொழுது யாவரேனு மொருவர் 'திராவிட சப்ததத்துவ சாஸ்திரம்' ஒன்று எழுத எண்ணங்கொண்டு எழுதப் புகுந்தால் இந்நூல் மிகப் பிரயோசனப்படுமென்பதற்கு எள்ளளவுஞ் சந்தேகங் கிடையாது. திரணதூமாக்கினி மகாருஷி, "மொழிப் பொருட்காரணம் விழிப்பத்தோன்றா" என்று சொன்ன போதிலும், அவ்வந்தகார நீக்கத்திற்கு ஆட்சேபனை சிறிதுமில்லையென்பது எமது துணிவு.

---

* Logical Facility.

இவ்வந்தணர் சிகாமணி அகத்தியம், தொல்காப்பியம் என்பனவற்றிற்கு முறையே பாணிநீயம், ஐந்திரம் என்னும் வடமொழி வியாகரணங்களே முதனூலெனவுரைப்பர். இவர் வடமொழியில் மகாபாடியம், கையடம், சித்தாந்த கௌமுதி, வாக்கிய தீபம், அரிபீடிகை, தாது விருத்தி, பதமஞ்சரி, சத்த கௌத்துவ முதலிய வியாகாரண சாஸ்திரங்களில் தேர்ந்தவ ரென்பதும், தமிழ் மொழியில், அகத்தியம், தொல்காப்பியம், நன்னூல் முதலிய இலக்கணப் பயிற்சியும், திருக்குறள், திருக் கோவையார், சிந்தாணி, சிலப்பதிகாரம் முதலிய இலக்கியப் பயிற்சியு மிக்குடையவரென்பதும், அவர் மேற்கூறிய 'பிர யோக விவேக'த்துள் எடுத்துக் காட்டாகப் பல இடங்களி லும் மேற்கோள் கூறியிருப்பதனல் விளங்கும்.

இப்பிரயோக விவேகமுடையார் வடமொழியிற் 'சாநகீ பரிணயம்' என்னும் நாடகஞ் செய்த இராம பத்திர தீக்ஷித ரிடம் இதைப் படித்துக் காட்டி அரங்கேற்றினர் என்ப. அது,

"சீதள சந்த்ர முகராம
பத்திர தீக்கிதர்க்குப்
போதொடு சென்று புகல்வோ
மவர்க்கும் பொழுதில்லையேன்
மேதினி யிற்றமிழ் செய்பிர
யோக விவேகந்தன்னைப்
பேதமி லாத பதஞ்சலி
பாற்சென்று பேசுவமே,"

என நம் தீக்ஷிதரே கூறியிருக்கின்றமையானும்,

"பேர்கொண்டு நின்றபிர யோக விவேகத்தைச்
சீர்கொண்ட ராமபத்ர தீக்கிதன்று—னேர்கொண்டு

கேட்டா னினிக்கண்ணுற் கேட்கும் பதஞ்சலிதான்
கேட்டாலென் கேளாக்கா லென்,"

எனச் சிறப்புப்பாயிரஞ் செய்தார் கூறுவதனுனுங் காண்க. யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் இந்நூலைப் பதினொரு வருடங்கட்கு முன்னர் அச்சிட்டிருக் கின்றனர். இந்நூலின் பெருமை யுணரவேண்டுபவர் அதன் மூல காரிகைகளைப் படித்து ஆநந்தமடைவாராக.

---

# 5. மயிலேறும் பெருமாள் பிள்ளை

மயிலேறும் பெருமாள் பிள்ளை யெனப் பெயருற்ற இவ் வாசிரியர் பாண்டிவள நாட்டிலே திருநேல்வேலி யென்ற நகரத்திலே, வேளாளர் குலத்தில் தாண்டவமூர்த்திப் பிள்ளை யென்பவர்க்குப் புத்திரராயுதித்தவர். இவர் கல்வியறி வொழுக்கங்களினுலும், குரு லிங்க சங்கமபக்தியினுலும் மிகச் சிறப்புற்றவர். மேலுமிவர் செல்வம், வாணுள், அதி காரமுதலிய நலங்களிற் சிறிதுந் தாழ்வில்லாமல் விளங்கி யிருந்தவர்.

இவருடைய மதமோ சைவ மதம். இவர் மரபு சித்தாந்த சைவர் மரபு. இந்தப் புலவர் திலகர் திருக்கைலாச பரம் பரைத் திருவாவடுதுறை யாதீனத்தைச்சார்ந்த சிஷ்யவர்க்கங் களிற் சிறந்தவர். மேலும் அவ்வாதீனத்திலே அத்தியந்த சிரத்தையும் பிரீதியுமுடையவர். ஆகையினுலே ஆதீனத்திற்கு அடிக்கடி வந்து ஞானதேசிகரைத் தரிசித்துக்கொண்டு போகும் வழக்கமுடையவராயிருந்தார்.

இவரிருந்த காலமோ 17-ஆம் சதாப்தத்தின் இறுதியும் 18-ஆம் சதாப்தத்தின் தொடக்கமுமாகும். இவர் சுவாமி

நாத தேசிகருடைய போதகாசிரியராம். ஆகவே இவர்க்கு யாம் மேலே கூறிய காலக்கணக்குத் தவறில்லை யென்பது பெறப்பட்டது. எப்படியெனில் முன் சுப்பிரமணிய தீக்ஷிதருடைய சரித்திரத்தில், வைத்தியநாத நாவலர், சுப்பிரமணிய தீக்ஷிதர், சுவாமிநாத தேசிகராகிய இம்மூவரும் ஏககாலத்தவர்களென்று ஸ்தாபித்திருக்கிறோம். இனிச் சுவாமிநாத தேசிகர் நமது மயிலேறும் பெருமாள் பிள்ளையினுடைய மாணுக்கரென்று காட்டப்புகுவோம். இவ்விஷயமானது, சுவாமிநாத தேசிகர் தமது இலக்கணக் கொத்துப் பாயிரத்துள், "தமிழ் வித்தியா குரு வணக்கம்" என்று பெயரிட்டு, ஐந்தாவது விதியாகத்,

"திருநெல் வேலி யெனுஞ்சிவ புரத்தான்
றுண்டவ மூர்த்தி தந்தசெந் தமிழ்க்கடல்
வாழ்மயி லேறும் பெருமாண் மகிபதி
யிருபத கமல மென்றலை மேற்கொண்
டிலக்கணக் கொத்தெனு நூலியம் புவனே,"

என்று கூறுவதனுலே நாட்டப்படுதல் காண்க.

இவர் சுயமாகக் காவியங்கள் ஒன்றுஞ் செய்யாத போதினும்,

"கல்லாடர் செய்பனுவற் கல்லாட நூறுநூல்
வல்லார் சங்கத்தில் வதிந்தருளிச்—சொல்லாயும்
மாமதுரை யீசர் மனமுவந்து கேட்டுமுடி
தாமசைத்தார் நூறு தரம்,"

என்று பெரும்பான்மையோராற் புகழப்பெற்றதும், "கல்லாடம் படித்தவனோடு * மல்லாடப் படாது" என யாவராலும் சிறப்பித்துச் சொல்லப்பட்டதும், நூறு அகவல்கள் அடங்கி

* மல்லாடப்படாது - சொல்லாடப்படாது.

யதுமாகிய இக்கல்லாடத்திற்கு முதன் முப்பத்தேழு அகவல் முழுவதும் உலகத்தார்க்கு எளிதில் விளங்கும் வண்ணம் செவ்வியவுரை யொன்று வரைந்தருளினர். எஞ்சியுள்ள அறுபத்துமூன்று கவிக்கும் உரையெழுது முன்னர் நம் புலவர்க்கு இறுதிக் காலம் நேரிட்டது தமிழ் கற்பாருடைய துரதிர்ஷ்டமே யன்றோ?

இனிக் கல்லாட வுரையின் மகிமையைச் சற்று எடுத்துத் தெரிக்கப் புகுவாம். இவ்வுரையின்கண் இவருடைய வாசகமெழுதும் ஆற்றலும் சொல்லாட்சித்திறனும், ஆழ்பொருளுணுக்கமும், இலக்கணத்தேர்ச்சியும் நன்கு புலப்படுகின்றன. இப்பொழுது தற்காலத்திலே முற்று முணர்ந்து விட்டதாக மனப்பால் குடித்து நாடக நடிக்குஞ் சிலப் போலிப் புலவர்களுடைய உரைகளாகிய மின்மினி போலாது, இக்கல்லாடவுரையோ மலைமேலிட்ட தீபம் போல விளங்குகின்றது. மேலும் * "வறியன் றனக்குரியவோர் சிறு கந்தையில் அதன் வடிவந் தெரியாவண்ணஞ், செல்வர் பலரிடத்துஞ் சென்றிரந்து பெற்ற பல வண்ணமுள்ள உயர்ந்த ஆடையின் கிழிகளைப் பொதிந்து அது மிகவும் அகன்று நீளுமாறு தைத்துப் பொத்திய போர்வையாகிய பொந்தை போலக் கோவைப் பட எழுதற்படாததாயும், சாமானியமாய பலராலுஞ் சொல்லப்படுவதாயும், சிலவரிகளிலடங்குவதாயும் ஆழ்ந்து நுண்ணிய பொருளை விளக்கமாட்டாததாயுமுள்ள தமதுரைக்குத் தொல்காப்பிய முதலிய இலக்கணநூற் சூத்திரங்களையும் சிவஞான சித்தியார் முதலிய ஞானநூற் செய்யுட்களையும் பல உரையாசிரியர்கள் கூறும் பல அரிய உரைகளை

* மதுரை மகா வித்துவான் சபாபதி முதலியாரவர்கள் செய்த ஞான சதுஷ்டய வச்சிர தர்ப்பண சூசிகை.

யும்............இடைக்கிடை சேர்த்து இது தமது உரை யெனத் தெரியாவண்ணம் பொதிந்து, ஓர் குழந்தையிடத்துச் செம்மை, கருமை, பொன்மை முதலிய வன்னங் கிடைத்த வழி அதுவுமோர் ஓவியனைப்போல் யானை குதிரை முதலிய அந்தக்கேடான சில சித்திரங்களை யெழுதி அவற்றை நல்ல வர்ணங்களால் பளபளக்கச் செய்தபோது சித்திரத்தியல் புணராதோர் அவற்றைக் கண்டாச்சரியமடையுமாறு போல சாமாநிய ஜனங்கள் கண்டு ஆச்சரியமடையும்படி," கூறப்படு முறைகள் போலாது, மயிலேறும் பெருமாள் பிள்ளையவர்கள் தமது உரையின்கண் முன்னோரியற்றிய செய்யுட்களையு முறை களையும் ஆங்காங்குச் சிறிது சிறிது எடுத்துக் கூறுதல் முத்துக் கோவைக்குத் தொங்கலாக மாணிக்கம், வயிரம் முதலிய வற்றாலாய பதக்கங்களை யமைக்குமாறுபோலா நின்றது.

கல்லாடமோ மிகச் சிறந்த நூலென முன்னே குறித் தாம். ஆகவே அதற்கு இத்தகைய நல்லுரை யில்லாதிருப் பின் அதன்கணுள்ள அகவல்களின் பொருளை நன்குணர் தல் மகாதுர்லபம். இவ்வுரையினருமை ஏனைய 63 அகவல் களையும் படிக்கும்பொழுதன்றே விளங்கும். கல்லாடத்தின் பொருட் சுவையைப் பற்றி விவரித்தற்கு இது தருணமென்று தலின் விடுத்தொழிவோம். இவருடைய உரையில் இன்ன பாகம் உபயோகமற்றது என்று தள்ளுதல் முடியாது. இவர் இடைப்பிறவரலாகக் கொண்டு அநேக அகவல்களிற் கஷ்ட மான பாகங்களை அர்த்த புஷ்டி நன்கு தோன்றுமாறு விலக் கணந்தந்துரைத்தும், துறைகளொடு அகவலின் தாற்பரியங் களைப் பொருத்திக்காட்டியு மிருக்கின்றனர். இக்கல்லாட வுரையைப் படித்து ஆநந்தித்தல் தமிழ் கற்பார் யாவர்க்கு மிகவு மாவசியகமான காரியம்.

இனி பிந்நூற்ருண்டுப் புலவரொருவர் சுப்பராய உபாத்தியாயர் என்பார் 37-வது அகவற்கு மேல் 60 அகவல்களுக்கு ஏகதேசம் நமது மயிலேறும் பெருமாள் பிள்ளை யுரையைத் தழுவி யுரைசெய்து இரண்டையுஞ் சேர்த்துப் பதினைந்து இருபது வருடங்கட்கு முன்னர் அச்சிட்டிருக்கின்றனர். எஞ்சியுள்ள மூன்றகவல்களுக்கும் பொருள் தெரிந்திலவாம். இதினின்று மொருபாகம் விசேஷமாய் திராவிடத்தில் எம். ஏ. பரீட்சைக்குப் போகிறவர்களுக்குப் பாடமாக நியமிக்கப்பட்டுவருதல் ஆங்கிலம் பயின்ற தமிழ் மாணவர்கட்குத் தெரிந்திருக்கலாம்.

---

## 6. சுவாமிநாத தேசிகர்

சுவாமிநாத தேசிகர் என்னும் நாமதேயத்தையுடைய இம்மகா பண்டிதர் பாண்டிவள நாட்டிலே வேளாளர் குலத்திலே பிறந்தவர். இவர் கல்விக்களஞ்சியமாகவும், கருணை முதலிய சற்குணங்களுக்கு ஆகரமாகவும் விளங்கியவர். இவர், மயிலேறும் பெருமாள் பிள்ளையவர்களுடைய மாணுக்கரென்று காட்டியிருக்கிறோம்.

இவருடைய மதமோ சைவ மதம். இவர் பரம்பரைச் சித்தாந்த சைவர் மரபினர். இவர் இளமைப் பருவத்திலேயே துறவறப் பிரீதியுடையவராதலின், திருக்கைலாச பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்தைச் சார்ந்து, அப்பொழுது அவ்வாதீனத்தில் ஞானதேசிகராக வீற்றிருந்த ஸ்ரீமத் அம்பலவாண தேசிகரிடம் சிவதீக்ஷை பெற்று விளங்கியவர். இஃது, இலக்கணக் கொத்துப் பாயிரத்துள், "தீக்ஷா குருவணக்கம்" எனத் தலைச்சாத்திட்டு மூன்ருவது விதியாக,

"ஊரும் பேரு முருவு மில்லா
ஞயினுந் திருவா வடுதுறை யூரனைந்
தம்பல வாண னெனும்பெய ராதரித்
தறிவே யுருவா யமர்ந்தகுரு ராயனைப்
பொறையுடல் போகப் புகழ்ந்தடி போற்றுவாம்,"

என்று கூறப்பட்டிருப்பதனாலே நன்கு விளங்கும். மேலு மிவ் வாசிரியர் ஆண்டு அவ்வாதீனத்தில் ஞானதேசிகர்பால் அருட் பணி புரிந்துகொண்டு அணுக்கத் தொண்டராய்ச் சின்னாள் அமர்ந்திருந்தனர். இக்காலத்திற்றான் நமது தேசிகர் தமிழ் கற்குமாறு பன்னீரியாண்டு மயிலேறும் பெருமாள் பிள்ளைபாற் சென்றது. நந்தேசிகர் அவர் மாட்டுத் திராவிடம் பயின்ற தோடே நின்றுவிடாமல், திருநெல்வேலி ஜில்லா இராசவல்லீ புரத்திற் கடுத்த செப்பறைப்பதிக் கநகசபாபதி சிவாசாரி யாரிடத்துக் கீர்வாண பாஷையும் பயின்றனர். இங்ஙனம் தாம் பயின்ற நன்றியறிதலை யுலகிற்குத் தெரிவிப்பானன்றே "சம்ஸ்கிருத வித்யா குரு வணக்கம்" என்று தீட்டிச்

"செப்பறைப் பதியின் வாழ்சிவத் துவிசன்
கநக சபாபதி கருதுவட னூற்கடற்
றபோதகர் புகழுஞ் சைவாதி ராச
னுபய பதங்களை யுண்மையொடு பணிவாம்,"

என்று கூறிய தூஉமென்க. இவர் தம் பின்னாட்களில் ஈசான தேசிகர் எனத் தீட்சாநாமப் பூட்சியிற் பொலிந்து திருநெல் வேலி ஆதீனத்தைச்சார்ந்த ஈசாந மடாலயத்தில் இருந் தருளினர்.

இவர் இருந்த காலம் முன்னே கூறியாங்கு, 18-ஆம் நூற்றாண்டின் தொடக்கமேயாம். இதைப்பற்றி மயிலேறும்

பெருமாள் பிள்ளை யவர்களது சரித்திரத்தில் வரைந்து சுட்டிப்போந்தோம். ஆதலின் இவ்விஷயத்தைக் குறித்து விரித்துரையாது விடுக்கின்றோம், ஏனெனில், "கூறியது கூறல்" என்னுங் குற்றத்தினின்றுந் தவிர்தற் பொருட்டு. இவர் வெகு காலம் ஜீவித்திருந்ததாகக் கேள்விப்படுகின்றோம்.

இப்புலவர் புங்கவர் செய்த பிரபந்தங்கள் "இலக்கணக் கோத்துரை" என்பதும் "தசகாரியம்" என்பதுமாம். இவ்விரு நூலையு மிவர் இயற்றினாரென்பதைப்பற்றி ஐயங்கொள்ளக் கிடத்தற்கு இடனில்லை; ஆகவே யினி யப்பிரபந்தங்களின் குணா குணங்களைப்பற்றிக் கூறப்புகுவாம்.

முதலாவதாகிய "இலக்கணக் கோத்துரை" என்னும் பிரபந்தமானது ஒரு வியாகரண சாஸ்திரம். இஃது பாயிர முட்பட வேற்றுமையியல், வினையியல், ஒழிபியல் என்று நான்கு இயல்களை யுடையது. ஆகவே யிது தமிழிலக்கணத்தின் ஒரு பகுதியும் அதிக முக்கியமானதுமாகிய சொல்லதிகாரத்தின்பாற் படுகின்றது. இதில் 131 சூத்திரங்களுள. இவற்றுள் ஒவ்வொரு விதியும் அருமையான வியாகரண ரகசியங்களை விளக்கிக் காட்டுகின்றது. இவர் தாங்கற்ற இலக்கண இலக்கியங்களில் இலைமறை காய்போல் மறைந்து கிடந்த அரிய உண்மைகளை யெல்லாந் தமது நுட்ப புத்தியினாலாராய்ந்து கூறியிருக்கின்றனர். சூத்திரங்களெல்லாம் வெகு நேர்த்தியாய் அமைந்திருக்கின்றன. இவர் "பலர் நூல்களினும் பலருரைகளினுஞ் சிதறிக் கிடந்த சில விதிகளை ஒவ்வொரு சூத்திரத்தால் ஒருங்கே" யாவரும் அறியும்படி செய்திருத்தலின் "இலக்கணக் கொத்து" என்று பெயரிட்டதாகக் காரணங் குறிக்கின்றார். இவர் பாயிரம் ஆறாவது விதியுள்,

"என்னு லியன்றது
சிறப்பா யுள்ளன சிலவே டினனவை
மறப்பெனும் பகைவன் வாரிக் கொண்டன
னவன்கையி லகப்படா தடங்கின வவற்றுளுஞ்
சிறிதினைச் சிறியேன் சிறிய சிறார்தமக்
குரைத்தனன்,"

என்று அவையடக்கம் கூறியிருத்தலின் நயத்தை யாவரும் உணர்வர். இதிற் கருவி சொல்லும் பாயிரம் 7-வது விதியுட் கூறப்பட்ட சில பாகங்களை யாழ்ப்பாணம், மகா-ா-ா-ஸ்ரீ சி. வை. தாமோதரம் பிள்ளை யவர்கள் மறுத்து நியாயங்காட்டி யிருக்கின்றனர். இவற்றின் தாரதம்மியங்களைப்பற்றி விவரிப்பதற்கு இது தக்க காலமன்றாதலின், அரை மனத்துடன் விடுகின்றாம். இவருடைய கொள்கைகளெல்லாம் பரந்த தன்மையனவாகக் காணப்படுகின்றன. இத்தன்மையானது தற்காலத் தமிழ்ப் பண்டிதர்களிடத்துக் காணப்படுதலரிது. இவருடைய பரந்த கொள்கைகட்கு உதாரணமாக ஈண்டுச் சில குறிப்பாம்.

"மாரிபோற் கொடுப்பினு மந்தனை விட்டுக்
கூரிய னுடனே கொடுத்தும் பழகுக."

"முற்கா லத்துப் போதகா சிரியர்
மொழிகுவர் மறையா ரருமையாம் விதிகளை
வழிவழி நின்று வழங்கற் பொருட்டே
யிக்கா லத்தா ரென்பய னினைந்தோ
விசையார் தாமு மிசையார் பூமியி
லிங்ஙன மாதலி னிறக்குமென் றெண்ணி
யவைகளைத் திரட்டி யமைத்தனன்,"

என்பன முதலான கூற்றுக்கள் எல்லாம் மேற்கூறிய பரந்த கொள்கைக்குத் திருஷ்டாந்தமாதல் காண்க. இனியிவர் இவ்விலக்கணக்கொத்திற்கு உரையுந் தாமே யெழுதினர். இவரிங்ஙன மெழுதியதற்குக் காரணமாக வைத்திய நாத நாவலர் இலக்கண விளக்கத்திற்கு உரை யெழுதியதையும், சுப்பிரமணிய தீக்ஷிதர் பிரயோக விவேகத்திற்கு உரையெழு தியதையும் கூறுகின்றனர். இனி முதலாவதாகிய வேற்று மையியலில் காரக இலக்கணத்தை விரித்துக் கூறுவான்றொ டங்குகின்றார். இடையிடையே வடமொழிக் கொள்கைக ளோடு பொருத்திக் காட்டுகின்றார். இனி யிரண்டாவதா கிய வினையியலில் தொல்காப்பியமாகிய பேரிலக்கணங்களிற் காணப்படும் அரிய இலக்கண நுட்பங்களையும் குறட் பரி மேலழகருரையில் ஆங்காங்குக் கூறிக் கிடக்கின்ற அருமை யான சில விஷயங்களையும் இவர் விதியிலே தொகுத்திருக் கின்றனர். இனி மூன்றாவதாகிய ஒழிபியலில் பிரயோக விலக்கணமும் அண்மை, தகுதி, அவாய்நிலை, என்பன முத லான தருக்கநூல் சம்பிரதாயங்களும், உபசர்க்கம் பிரத்தியய மாகிய இவற்றினிலக்கணங்களும் பொருள்கோளி விலக்க ணங்களும் இவைபோல்வன பிறவும் விரித்துக் கூறப்பட்டிருக் கின்றன. இவர்,

"இந்நூற்குதாரணந் தொன்னூற் செய்யுளுட்
சிலவே யெழுதினம் பலவே யெழுதின
முலக வழக்கினு ளுணரும் பொருட்டே,"

என்று தாம் சொல்லிய வண்ணம் உதாரணங்களெல்லாம் உலக வழக்கினின்றும் எடுத்துக் காட்டிச் சூத்திரங்களை நன்கு விளக்குகின்றார்.

இனி யிரண்டாவதாகிய "தசகாரியம்" என்னும் பிரபந்தமானது ஒரு ஞான நூல். இஃது சித்தாந்த சைவ மத சம்பந்தமான விஷயங்களை நன்கு விளக்குகின்றதாதலின், இதற்கு விசேஷ மகிமை யேற்பட்டுளது. இது "பண்டார சாத்திரம்" எனச் சைவர்களால் வழங்கப்பட்டு வருகின்ற பதினன்கு ஞானநூல்களிற் பதின்மூன்ருவதாகின்றது. இதில் இவ்வாசிரியர் தமது புத்தி நுட்பத்தை இனிது காட்டியிருக்கின்றூர். இந்நூலானே நமது தேசிகருடைய சொல்வலிமையும் தருக்கநூற் பயிற்சியும்இனைய வென்று விளங்குகின்றன.

இனிப் பொதுப்பட இவருடைய கண்டந சாமர்த்தியமும், வாதஞ் செயும் வன்மையும், இவைபோல்வன பிறவும், ஐரோப்பா கண்டத்திலே 12-ஆம், 13-ஆம் நூற்ருண்டுகளிலே "ஸ்கூல்மேன்" என்று பேர் பெற்றிருந்த ஒருவித சாஸ்திரிமார்களைப்பற்றி யெமக்கு ஞாபகமூட்டுகின்றன. இதனுலே நந்தேசிகோத்தமர்க்கு விசேஷத் தாழ்வு தோனிக்க மாட்டாதென்று கொள்ளுதற்குச் சற்றும் யோசனை வேண்டுவதில்லை.

---

## 7. அருணுசல கவிராயர்

அருணுசல கவிராயர் என்னும் நாமதேயத்தைப் பெற்ற நம் தமிழ்ப் பாவலர், சோழவள நாட்டின்கண் உள்ள தரங்கம் பாடியென்ற கடற்கரைப் பட்டினத்திற்கு அருகே யிருக்கின்ற தில்லையாடி யென்னுமூரிலே சாலிவாகன சகாப்தம் 1635-ஆம் ஆண்டிற்குச் சரியான கி. பி. 1712-ஆம் வருடம் பிறந்தவர். நல்லதம்பிப் பிள்ளை யென்ற தந்தைக்கும், வள்ளியம்மாள் என்ற தாய்க்கும் புத்திர பாக்கியமாக ஜனித்தவர்.

இவர்க்கு மூத்த சகோதரர் மூவர் இருந்தனராமாதலாலும், வேறு உடன்பிறந்தார்களில்லையாமாதலாலும், இவர் தம் தாய் தந்தையர்க்குக் கடைப் பிள்ளையாயினராதலின் அதிக அன்பு பாராட்டி வளர்க்கப்பட்டு வந்தார். இவர் தக்க பருவத்திலேயே வித்தியாரம்பஞ் செய்விக்கப்பெற்றுக் கல்வி கற்றுத் தமக்குப் பன்னிரு ஆண்டு போதாலும் தம் இருமுதுகுரவரையும் இழக்குந் துர்பாக்கியம் சம்பவித்தது. சம்பவித்துமென்? நம் கவிராயர்க்கு அச்சிறுவயதிலேயே செந்தமிழணங்கின் மாட்டுள்ள அன்பானது வாரியென ஆரவாரித்து நம்புலவரை வளைந்துகொண்டது. உடனே நம் புலவர் தமது நீர் நாடு நீங்கித் தம்மை நீங்காது பின்றொடரும் அன்பு வெள்ளங் கடப்பதற்குப் * புகலான † புணை தேடப் புறப்படுவான் தொடங்கித் தருமபுர ஆதீனத்திற்குச் சென்று ஆண்டு வசித்த தம்பிரான்மாரிடம் ஒரற்புத நாவாய் பெற்றுத் தமது அற்புக் கடலைக் கடக்கப் புகுந்தார். இவரது "குசை நுனி யதனினுங் கூரிய மதி" யினைக்கண்ட தம்பிரான்மார் இவர்பால் மிகப் பிரீதியுற்றுக் கீர்வாண திராவிடாந்திர பாஷைகளிலவரை வல்லுநராக்கினதோடே நின்றுவிடாமல் "சைவ சித்தாந்தத் தெய்வ நன்னூலை"யும், அவற்றின்கணுள்ள இரகசியப் பொருள்களையும், ஐயந்திரிபற வோதுவித்தார்கள். இவர் விசேஷமாகத் தமிழிலக்கணங் கற்றதெல்லாம் தருமபுர மடத்தைச்சேர்ந்த அம்பலவாணக் கவிராயரிடத்தென்று சொல்லுப.

இவர் வேளாளர் குலத்தைச் சேர்ந்தவர். இவர் சித்தாந்த சைவர் மரபினராயினும் வைணவத்திலு மதிகப் பிரீதியுள்ளவர். மேலுமிவர் தாம் தருமபுர ஆதீனத்திற் கல்வி கற்றபின் அம்மடத் தம்பிரான்மார் இவரைத் துறவியாக்குவான்

---

* புகலான - அடைக்கலமான † புணை - தெப்பம்

முயன்றும், நம்புலவர் அவர்கள் கருத்திற்கு இசையாராய்த் திரும்பிவிட்டனர். பிறகு இவர் தமக்கு முப்பதாவது வய திலே விவாகஞ் செய்துகொண்டு இல்லறம் நன்கு நடத்தற் பொருட்டுக் காசுக்கடையொன்று ஸ்தாபித்துக்கொண்டும் இராமாயணப் பிரசங்கஞ் செய்து கொண்டும் வந்தனர்.

இனி யிதுகிடக்க நங்கவிராயர் தமக்கு 42-வது வயதில் புதுச்சேரிக்கு வியாபார சம்பந்தமாய்ப் புறப்பட்டு ஓரிரவு சீ காழி மடத்திற்றங்கினதாகவும், ஆங்கு இவருடைய சகபாடி யாகிய சிதம்பரம் பிள்ளை யென்பார் தாம் பாடுவான் தொடங் கிப் பின் முடிவு பெறாதிருந்த பள்ளென்னும் ஒருவித பிரபந்தத்தை முடிக்கும்படி வேண்டிக்கொண்டதாகவும்,அவ ருடைய வேண்டுகோட் கிணங்கி நம்புலவர் அதனைப் பூர்த்தி செய்து ஒரு வேலையாளிடங் கொடுத்துவிட்டுத் தமது நண்ப ரிடஞ் சொல்லாது புதுச்சேரிக்குப் போய்விட்டதாகவும், இது கேள்வியுற்ற சிதம்பரம் பிள்ளை யவர்கள், பள்ளினைப் பார்த்து மகிழ்ந்து நம் புலவரைத் தமக்குச் சமீபத்திலேயே யிருத்திக் கொள்ளும் நோக்கத்தினராய்ப் புதுச்சேரிக்குப் போன நண்பர் வருமுன் ஒருவீடு கட்டி, நமது கவிராயரு டைய சமுசாரத்தினை யதன்கண் இருக்கும்படி செய்ததாக வும், புதுச்சேரியினின்றும் போந்த புலவரை யிட்டுக்கொண்டு அப்புது வீட்டிற்குச் சென்றதாகவும், ஆண்டு நம் புலவர் தம் மனைவி முதலாயினோரைக் கண்ணுற்றுக் களிகூர்ந்து, அவ் விடத்திலேயே தம்பின்னாள் முழுவதுந் தங்கிவிட்டதாகவுஞ் சொல்லுவராதலின் இவர் சீகாழி அருணாசல கவிராயர் என்று அழைக்கப்படுகின்றாரென்ப.

இனி நம் புலவர் சீகாழியி லிருந்தகாலத்து அநேக பிரபந்தங்கள் செய்தனர். மேலே சொல்லிய பள்ளினை

யொழித்து இவர் செய்த நூல் ஐந்தாகும். அவை சீகாழிப் புராணம், சீகாழிக் கோவை, அனுமார் பிள்ளைத்தமிழ், இராம நாடகம், அசோமுகி நாடகம், என்று பெயர் பெறும். இவ் வைந்து பிரபந்தங்களுக்குள்ளே யிவருடைய இராம நாடகம் ஒன்றே யதிகப் பிராதாந்யத்தை யடைந்து பிரகாசிக்கின்றது.

இனி யிவருடைய பிரபந்தங்களைப் பற்றிப் பேசப்புகு வோம். முதலாவது இவருடைய சீகாழிப் புராணமானது ஏறக்குறைய 1500 கவிகளை யுடையது. இப்புராணத்தில் இவர், சீகாழிக்குத் துவாதச நாமம் ஏற்பட்டதற்குக் காரண பூதமான கதைகளையும், சிவபெருமானு லத்தலத்துத் திருவிளை யாட்டயர்ந்ததாகக் கூறப்படும் இலீலைகளையும் பற்றி நன்கு விவரித்துக் கூறியிருக்கின்றனர். இப்புராணம் வெகு சுகமாக அமையாதபோதிலும், அதிகமாகத் தாழ்ந்த தரத்திற் சேர்ந்த தன்று; சில விடங்களிற் செவ்வனே யொழுகாது கடின நடையிலமைக்கப்பட்டிருக்கிறது. இவர் இடையிற் கூறுங் கற்பனைகளெல்லாம் விசேஷமாகச் சாமாந்யமானவை யென் பது பெரும்பாலார் கொள்கை.

இரண்டாவதாகிய சீகாழிக் கோவையும் கைக்ககப்பட வில்லை. சிலர் சீகாழிக்குப் புராணமொன்றைத் தவிர்த்து இவர் வேறொன்றுஞ் செய்யவில்லை யென்றுங் கூறுப. இனி யிவருடைய சுதந்தர யூகத்தையுங் கற்பனு சாமர்த்தியத்தை யும் பற்றி யோசிக்குமிடத்துக் கோவைப் பிரபந்தஞ் செய்ய இவர் வல்லுநரல்லரென்பதுபோதருமென்று கூறுவாருமுளர்.

அனுமார் பிள்ளைத் தமிழ் என்பது வழக்கம் போலப் பத்துப் பருவங்களுடையதாய்க் காணப்படுகின்றது. இது சற்று நல்ல நடையில் எழுதப்பட்டிருக்கின்றது. சிற்சில

கவிகள் மாத்திரமே நல்ல நடைபெறவில்லை. சில கற்பனைகள் படிப்போர்க் காநந்தந் தரத்தக்கன.

மேற்கூறிப் போந்த பிரபந்தங்களிலெல்லாஞ் சிறந்ததாயும், விசேஷமாகப் படிக்கப்படுவதாயும் இருக்கின்ற இராம நாடகத்தைப் பற்றி யேகதேசம் பேசப் புகுவோம். இது கம்பராமாயணக் கதையை நாடகமென நாமஞ் சூட்டி விருத்தங்களாகவும், கீர்த்தனங்களாகவும், சீகாழிக்குச் சமீபத்திலேயுள்ள சட்டைநாதபுரத்தினின்றும் போந்து சங்கித வித்துவான்களாய்க் காணப்பட்ட வேங்கடராமையர், கோதண்டராமையர் என்னுமிருவருடைய உதவியைக் கொண்டு இராக தாளங்களுக்கு இசைய நம் புலவராலியற்றப்பட்டது. இதையிவர் தமக்கு அறுபதாவது வயதிற்றான் பாடினரென்ப. இஃது தற்காலத்திலே மகா-ா-ா-ஸ்ரீ பெ. சுந்தரம் பிள்ளையவர்கள், எம். ஏ. யால் எழுதப்பட்ட மனோன்மணீயம் என்ற நாடகம் போலாது, "தொந்திக் கணபதி தோன்றினரே" என்று குதிக்கும் கூத்தமார்க்கத்திற் பட்டதாயினும் பெரும்பான்மையோராற் படிக்கப்படுதல் யாவர்க்கும் தெரிந்த விஷயம். இப்புத்தகத்தின்கட்படு மிவருடைய சொல்வலிமையும், நயமுங் "கற்போர் நெஞ்சங்காமுறப்படுத்துங்" தகையனவென்பது வெள்ளிடை மலைபோல் விளங்குதலறிக. இது சென்னைப்பட்டினம் மணலி முத்துக்கிருஷ்ண முதலியார் சமுகத்திலரங்கேற்றறப்பட்ட தென்ப. இதற்கு ஆதாரமாகச்,

"சித்திதரு கிறவல்லி புத்திதருகிற வல்லி
தேவர்கள் வணங்குவல்லி
தில்லைநா யகவல்லி சிவகாம வல்லியிரு
திருவிழிக் கருணையாலே

சத்யவாச கனென்று பூமண்ட லாதிபர்க
டாமெங்க ணுந்துதிக்குஞ்
சகலபா ஷாநிபுண மணலிமுத் துக்ருஷ்ண
சதுரநீ வாழிகண்டாய்.
நத்துமலர் குவளைநான்; மதியநீ; செஞ்சாலி
நான்;கருவி மழைமேகநீ;
நளினநான்; பரிதிநீ; பிள்ளைநான்; அன்னைநீ;
நான் கவிஞன்; வழுதிநீகாண்;
சுத்தமுள ராமாயணந்தனைக் கொண்டுனது
சுமுகமது பெறவருகிறேன்
சொற்பொரு ளறிந்தளவு சொல்லுவேன் கேட்கவே
துணையாக வேண்டுநீயே,''

என்ற சீட்டுக்கவியினையும், அரங்கேற்றத்திற்குப் பின் நம் புலவர் பாடிய,

"கனந்தந்தான் கனகாபி ஷேகந் தந்தான்
களங்கமிலாக் கருப்பொருளை யழைத்துத் தந்தான்
மனந்தந்தான் முடிசூட்டு மாலை தந்தான்
வாணிசிங்கா தனத்திருத்தி வரிசை தந்தா
இனந் தந்தான் ராமகதை எவர்க்கும் தந்தா
னெனைராமா யணக்கவிஞ னெனப்பேர் தந்தா
னனந்தந்தான் மணலிமுத்து க்ருஷ்ண பூப
னகந்தந்தா னிருமையிலுஞ் சுகந்தந் தானே'',

என்ற கவியினையுங் கொள்க. இதற்குமுன் இஃது ஒரு முறை ஸ்ரீரங்கநாதர் சந்நிதியில் வாசித்தரங்கேற்றப்பட்டது என்ப.

இனி அசோமுகி நாடகமானது விசேஷமாகப் படிக்கப் படாமையானும், இராம நாடகம் போல் அதன்கண் அவ்

வளவு சிறப்பின்மையானும் பிறவாற்றானும் விடுத்து மேற் செல்வாம்.

இத்தகைய நம் கவிராயர் தம்மிறுதிக் காலத்துச் சைவ சந்நியாசம் பூண்டு சின்னாள் திரிந்தனர். இவர் கி. பி. 1779-ஆம் ஆண்டு தமக்கு 67-வது வயதிலே சீகாழித் தலத்திலே சிவலோகப் பிராப்தி யடைந்தார். இவர் சாமாநிய ஜனங்க ளான் மிகுதியுங் கொண்டாடப்படுகின்றார்.

---

## 8. கடிகை முத்துப் புலவர்

கடிகை முத்துப் புலவர் என்று பெயர் படைத்த இந்த வித்துவான், திருநெல்வேலி ஜில்லாவைச் சேர்ந்த சமஸ்தான மாகிய எட்டைய புரத்திற் பிறப்பு வாய்ந்தவர். இவர் இருந்த காலம் 18-ஆம் நூற்றாண்டென்றே கொள்ளப்படும். அஃ தெங்ஙனம் கொள்ளப்பட்டதெனில், நம்புலவர் அவ்வெட் டையபுரத்தை யரசாண்ட சகவீரராம வேங்கடேசுர எட்டம நாயக்கரது வாசல் வித்துவானா யிருந்தாராதலின் இவர் அந் நூற்றாண்டுப் புலவரென்றும். இவர் அவ்வரசனது வாசல் வித்துவானென்றதற்கு அச் சமஸ்தானத்திலேயே கர்ண பரம் பரையாக யாம் கேள்விப்பட்டதும்,

*"கருப்பஞ் சிலையு மோர்கரமே
கண்டே னானுஞ் சூகரமே
காமப் பயனு முட்கரமே
கணையைத் தொடுத்தான் சீக்கரமே
வருத்தம் புரிவா ரநேகரமே
வல்லார் மடவார் நிசகரமே

---

* இது சமுத்திர விலாசச் செய்யுள்

மாமால் வேங்க டேசுரெட்டன்
வருவான் வருவா னென்றிருந்தேன்
திருத்தும் படிக்கு மனோகரமே
செய்தா னினித்தி வாகரமே
தினியில் வருவா யெனக்கரமே
தெரிய வுதித்தான் சக்கரமே
பொருத்தந் தருங்கண் ணுகரமே
போர்வேட் கிலவீ ராகரமே
பூவை மாருஞ் சேகரமே
புகழ்ந்தேன் ரத்தி னுகரமே,"

என்ற கவியும் இதுபோன்ற பிற கவிகளும் ஆதாரங்களா கின்றன.

இவருடைய கல்வியறிவினைக் குறித்துச் சொல்லுதற்கு மேற்கூறிய கவியொன்றே தக்க ஆதாரமாம். இவர் செய்த பிரபந்தங்களெல்லாம் விசேஷமாக நரஸ்துதியாகவே யிருக்கின்றன. இவராற் செய்யப்பட்டனவாகச் சொல்லிக் கொள்ளும் பிரபந்தங்கள் மூன்று மாத்திரம் அச்சிடப்பட்டிருக்கின்றன. அவை சமுத்திர விலாசமும், திக்குவிசயமும், திருவிடைமருதூரந்தாதியும் ஆகும்.

இனி மேற்கூறிய பிரபந்தங்களின் நயங்களைப்பற்றி யெழுதப் புகுவாம். முதலாவதாகிய சமுத்திர விலாசமென்பது நூறு செய்யுட்கள் அடங்கியது. இதற்குக் கழிக்கரைப் புலம்பல் என்று மற்றொரு நாமமுண்டு. சமுத்திரக்கரை யோரத்திலே இருந்து தலைமகனைப் பிரிந்து ஆற்றாமையால், மன்மதனுடைய பேரிகையாகிய கடலானது உத்கோஷிக்கத் தலைமகள் வருந்தா நிற்றலே யிந்நூலின் விஷயமாகும். இதிலேயே யிவருடைய கற்பனு சாமர்த்தியமும், சுதந்தர யூகமும்

வருணனைத்திறனும் இனிது விளங்குகின்றன. சிற்சில கவிகள் சமுத்திரத்திற்கும் அரசனுக்கும் சிலேடையாக அமைக்கப் பட்டிருக்கின்றன. சில செய்யுட்களில் திரிபு மடக்கு முதலிய சொல்லணிகள் இடையிடையே காட்டப்பட்டிருக்கின்றன. தமிழ் நூற்பயிற்சி யொன்றையே கருதி இந்தப் பிரபந்தம் மிகவுங் கொண்டாடப்படுகின்றது.

இரண்டாவதாகிய திக்கு விசயம் என்பது திருநெல்வேலி ஜில்லாவைச் சேர்ந்த ஒரு சிறு சமஸ்தானமாகிய சிவகிரிக்கு அரசனாகிய வரகுண ராம வன்னியனைப் பாட்டுடைத் தலைவனாகக்கொண்டு விளங்குகின்றது. இஃது அவ்வரசனுடைய செல்வம், சிறப்பு, அதிகாரம், பராக்கிரமம் முதலியவற்றை விரித்துக் கூறுகின்றது. இதிலே 320 கவிகளுள. இது சற்று எளிய நடையிலமைக்கப்பட்டுளது.

இனி மூன்றாவதாகிய திருவிடைமருதூரந்தாதி கும்பகோணத்திற்கடுத்த திருவிடை மருதூரிலுள்ள சிவபெருமான் மீது பாடப்பட்டது. இது அந்தாதி நியமத்திற் சற்றேனும் வழுவாத நூறு பாடல்களாலாகியது. இவ்வந்தாதியிலநேகங்கவிகள் துறைப்பொருளமைந்துள்ளன. அந்தாதித் தொடையும் பாட்டுக்களின் போக்கும் வெகு நேர்த்தியாயிருக்கின்றன. இவர் இப்பிரபந்தத்தைச் செய்ததனாலே யிவரைச் சைவரென்று கொள்ளுதற்கு இடனுண்டு. மேலும் இந்நூலொன்றுதான் நம் புலவர் செய்தவற்றுட் கடவுண்மேலது என்று தோன்றுகின்றது.

இவர் மேற் கூறிய பிரபந்தங்களைத் தவிர்த்து அநேகந் தனிப்பாக்கள் செய்திருக்கின்றனர். அவை மிகவும் ஆச்சரியகரமாகச் செய்யப்பட்டிருக்கின்றன. அவற்றுட் சில மடக்கு என்னும் அலங்காரத்தோடும் சிறந்த சப்தார்த்தங்க

ளோடும் விளங்குகின்றன. இத் தனிச் செய்யுட்களையெல்லாம் தனிப் பாடற்றிரட்டு என்னும் ஓர் அருமையான புஸ்தகத்தில் பரக்கக் காணலாம். *

---

# 9. தாமோதரம் பிள்ளை

புது நூற்றூண்டு பிறந்து யாவும் இனிது செல்லும் என்றெண்ணி எதிர்பார்த்து நின்ற நந் தமிழுலகம் பெரிதுந் துன்புறத்தக்கதோர் நிகழ்ச்சி கேட்டு நடுநடுங்குகின்றது. அந்தோ! புதுநூற்றூண்டு பிறந்த அற்றை ஞான்றே செந்தமிழுலகிற் செம்மை சான்று விளங்கிய நமது ரூவ்பஹதூர் - சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் இவ்வுலக வாழ்வை நீத்துச் சிவபிரான்றிருவடி நீழலிற் சென்று சேர்ந்தனர். என்னே உலகம்! என்னே வாழ்க்கை!!

தமிழ்ப்புலவ ரில்லங்களிற் பனையோலைச் சுவடிகளிற் சிறைப்பட்டுக் கிடந்து தவித்த செந்தமிழணங்கு நல்லாடையுடுத்துத் தெலுங்கு, கன்னடமாதிய பாங்கிமாரோடு அச்சுவாகனமேறி நாடெங்கும் உலாவருமாறு செய்தற்கட் பேரூக்கமெடுத்து உழைத்து நின்ற நம் பிள்ளையவர்கள் காலஞ் சென்றன ரென்பதுணர்ந்த யாவரே தமது அவல மெய்ப்பாட்டினை யடக்க வல்லார்? அவ்வாறாக யாம் எமது துன்பத்தை யடக்கப் புகுதலெவன்? மனத்தின்கணுள்ள துக்கம் வாய்விடுத்துக் கூறுமிடத்துச் சிறிது தணியுமன்றே. அங்ஙனங் கூறுதற்கட் குறை நிகழுமாயினும் உலகம் எம்மைப் பொறுக்க.

---

* இப்புத்தகம் சென்னைப் புத்தகப் பிரசுரகர் ஊ. புஷ்பரதச் செட்டியாரவர்களால் அச்சிடப்பட்டு வெளியாகி யிருக்கிறது. ஆங்குக் கண்டு கொள்க.

## வாழ்க்கை

நமது தாமோதரம் பிள்ளையவர்கள் யாழ்ப்பாணத்துச் சித்தூர் - வைரவநாத பிள்ளையவர்களது குமாரர். இவர் கி. பி. 1832 - ஆம் வருடம் பிறந்தனர். ஆண்டுள்ள யாழ்ப்பாணத் துக் கல்லூரியில் ஆங்கிலமும், சுன்னுகம் முத்துக்குமாரசுவாமி பிள்ளையவர்களிடம் தமிழ்க்கலையும் பயின்றனர். 1852-ஆம் வருடம் அக்கல்லூரியினின்றும் பரீட்சையிற்றேறிப் பட்டம் பெற்று வெளிப்போந்தனர். பின்னர்க் கோப்பாயிலுள்ள தோர் கல்விச் சாலையிற் போதகாசிரியராய் அமர்ந்தனர். அக் காலத்துச் சென்னையில் விளங்கிய பேர்ஸிவல் துரையவர்களால் அழைக்கப்பட்டுச் சென்னைக்குப் போந்து தினவர்த்தமானி யென்றதோர் தமிழ்ப் பத்திரிகையை நாடோறும் பதிப்பித்து வந்தனர். அங்ஙனம் பதிப்பித்தற்கண் நமது பிள்ளையவர் கள் உலகிற்குக் காட்டிய தமிழ் நூற்பயிற்சியும் ஆராய்ச்சி வன்மையும் அவர்க்கு மிக்க புகழ் விளைத்தன. இஃதுணர்ந்த துரைத்தனத்தார் பிள்ளையவர்களை இராசதானிக் கலாசாலை யில் தமிழ்ப்பண்டிதராய் அமரும்படி வேண்டிக்கொண்டனர். அங்ஙனம் அக்கலாசாலையில் தமிழ்ப்புலமை நடாத்தி வருப வர் 1857-ஆம் வருஷத்து முதன் முதலில் ஏற்பட்ட சென்னைச் சர்வ கலாசாலைப் பிரவேச பரீட்சையில் தேறினுர். பின்னர் அவ்வாறு தேறி நான்கு திங்கள் கழியுமுன் 1858-ஆம் வருடத்தில் நிகழ்ந்த பி. ஏ. பட்டப் பரீட்சையிலுந்தேறி னுர். எனவே நமது தமோதரம் பிள்ளையவர்கள் சென்னைச் சர்வகலாசாலையில் முதலிற் பி. ஏ. பட்டம் பெற்ற இருவருள் ஒருவராவர். பிள்ளையவர்கள் பி. ஏ. பட்டம் பெற்றவுடன் கள்ளிக்கோட்டைக் கல்விச் சாலையில் உதவி உபாத்தியாயரா யனுப்பப்பட்டனர். ஆண்டிருந்து சென்னைக் கோட்டையில் உயரியதோர் உத்தியோகத்திலமர்ந்து பலதுரைகளாலும்

தமது வாய்மை, நேர்மை, மேற்கொண்ட கடமை தவறுமை ஆதிய நற்குணங்கள் காரணமாகப் புகழப்பெற்று விளங்கி, 1882-ஆம் வருடம் உபகாரச் சம்பளம் பெற்று வேலையினீங்கினர். இடையில் இவர் கோட்டையில் வேலையிலமர்ந்திருக்கும் போழ்தே 1871-ஆம் வருடம் பி. எல். பரீட்சையிலுந் தேறியிருந்தனர். ஆகவே தாம் வேலையினீங்கினவுடனே 1884-ஆம் வருடம் குடந்தையம்பதியில் நியாயவக்தாவாய் அமர்ந்தனர். அதன்மேற் புதுக்கோட்டைச் சமஸ்தானத்தில் நியாயாதிபதியாயிருந்து உலகிற்கு நன்மை செய்வாராயினர். அக்காலத்தில் அவர்க்கு மகப்பிரிவு நேரிட்டமையின் வேலையை விடுத்துச் சென்னைக்கு வந்துவிட்டனர்.

## தமிழ்நூற் பதிப்பு

இது நிற்க. குடந்தையிலிருந்தபொழுது அச்சிடப்படாத பல அருமையான தமிழ் நூல்களைப் பனையோலைச் சுவடிகளைக் கொண்டு பரிசோதித்துப் பதிப்பிக்கத் தொடங்கினர். அவ்வாறு அவர் பதிப்பித்த நூல்களுட் பெரும்பாலன சாமானிய சனங்கள் பயிலாதனவும் அதிகமாய் விலைப்படாதனவுமாகிய இலக்கணநூல்களாம். தமிழின்மீது ஆர்வம் மிகுந்த இற்றைஞான்றினும் அவைகள் பெரிதுங் கவனிக்கப்படுகின்றிலவாமாக அந்நாட்களில் அவை விலைப்பட்டில என்பதோர் ஆச்சரியமன்று. அன்னணம் அவர் பிரசுரித்த இலக்கண நூல்கள் தொல்காப்பிய நச்சினுர்க்கினியம், தொல்காப்பியச் சேனுவரையம், வீரசோழியம், இறையனுரகப் பொருளுரை, இலக்கண விளக்கவுரை என்பனவாம். சங்க நூல்களில் எட்டுத் தொகையுள் ஒன்ருகிய கலித்தோகையும் இவர் பதிப்பித்ததே. பின்னர்த் தமிழிலக்கியங்களுட் பெரிதும் திரிசொற்களான் யாக்கப்பட்ட தணிகைப்புராணமும்சிறு காப்பியங்களுள் ஒன்றெனக் கருதப்படும் சூளாமணியும் பிள்ளை

யவர்கள் முயற்சியான் வெளிப்போந்தன. இவை தம்முட் பல பகுதிகள் பிரதமகலாபரீட்சைக்கும், பி ஏ., எம். ஏ., பரீட்சைகட்கும், அவ்வக் காலங்களிற் பாடங்களாய் ஏற் படுத்தப்பட்டன. இவர் பதிப்பித்த நூல்களெல்லாம் இவரது சங்கச் செய்யுட் பழக்கத்தினையும், நுணுகியுணருங் கூரியமதி யினையும், ஆராய்ச்சி வன்மையினையும் பெரிதும் புலப்படுத்து கின்றன. அவ்வந் நூல்களின் பதிப்புரைக்கட் பல அரிய பெரிய விடயங்களைச் சிக்கறவாராய்ந்து தெள்ளிதிற் றெரித் துளர். இவர் தமது இறுதிக்காலத்தில் எட்டுத் தொகையு ளொன்றாகிய அகநானூற்றினைப் பரிசோதித்து வந்தனர். ஐயகோ! அகப்பாட்டு அகப்பாட்டாகவே நின்றது.

## புலவர் மதிப்பு

இவ்வாறு மிகப் பெருமை வாய்ந்த நூல்களைப் பரி சோதித்துப் பதிப்பித்தமை காரணமாக இவர்க்குப் புகழ் மிகுவதாயிற்று. தமிழ்ப் புலவர்களிடத்து மிக்க நன்கு மதிக் கற்பாடுற்றனர். பற்பல நாட்டுத் தமிழ்ப் பண்டிதர்களும் இவரைச் சலஞ்சலத்தைச் சூழும் வலம்புரியெனச் சூழ்வா ராயினர்.

## பரீட்சிக்குந் திறமை

இத்தகைய புலவர் பெருமானது ஆற்றலும் நல்லொழுக் கமுங்கண்டு சென்னைச் சர்வகலாசாலையார் இவரைப் பரீட் சைக் கர்த்தராகப் பல்லாண்டுகளில் நியமித்தனர். இவர் அங்ஙனம் அத்தொழில் புரியுமிடத்துத் தமக்கியல்பாயுள்ள நேர்மையும் மாணவரிடத்து இரக்கமுங் காட்டியே வந்தனர். சென்னைச் சர்வ கலாசாலையில் தமிழ்ப் பரீட்சைக் கர்த்தர் களாயிருந்த கனவான்களெவரும் இவரது கல்விக்கு ஈடாவா ரல்லர். இவர் பரீட்சை வினாக்களெல்லாம் மாணுக்கரது

நுட்பமதியினைப் புலப்படுத்துவனவாம். மாணுக்கர் இயல் பறிந்தும் வகுப்பின் தரமறிந்தும் குறித்தகால வளவறிந்தும் வினாப்பத்திரிகை கொடுக்கும் பரீட்சாதிகாரியை யிழந்த தமிழ் மாணுக்கரின் துரதிர்ஷடத்தை யென்னென்பேம்! இத்துணை நலம் வாய்ந்த இவர் நம் சென்னைச் சர்வகலாசாலை யவயவி களுள் ஒருவராகவு மிருந்தனர்.

## நூலாசிரியத் தன்மை

பிள்ளையவர்கள் பதிப்பித்த நூல்கள் போகத் தாமே புனைந்தியற்றியன கட்டளைக் கலித்துறை யென்னுமோர் இலக்கண நூலும், வசன சூளாமணி யென்னுமோர் உரைநடை நூலும், சைவமகத்துவ போதம் என்னுமொரு சைவசமய நூலும், ஆறும் வாசக புத்தகம், ஏழாம் வாசக புத்தகம் என்னும் கல்வி யறிவிற்றேரும் இளஞ்சிறார்க்கென வகுத்த வசன நூல்களும் பிறவுமாம். இவரது உரைநடை செந்தமிழ்த் திரிசொற்கள் மலிந்து சொல்லடுக்கும் பதசாலங்களும் இயைந்து கட்டுரைச் சுவைநயங்காட்டி இயல்வது. இவ்வியல்புபற்றி யன்றே இவர்தம் வசன சூளாமணி பிரதமகலா பரீட்சைப் பாடமா யேற்பட்டதூஉ மென்க.

## ஒழுக்கம்

இவரால் ஆதரிக்கப்பட்டோரும் இவர்க்கு நண்பராய் நண்ணினேரும் பலதிறத்தினர். தென்னுடெங்கும் இவரை யறியாதார் எவருமில்லை. இவர் உண்மைதோன்ற வாதஞ் செய்வுழித் தமது நண்பர்களுக்காகச் சார்ந்து பேசியும் பிறருக்காக விலகிப் பேசியும் ஒழுகுறு மியல்புடைய சில போலி மாக்கள் போலாது எப்பொழுதும் நடுவு நிலைமை குன்றாத

வாறு நடந்து வந்த நற்றமிழாளர். தவறுநர் நண்பரேயாயி னும் நொதுமலரே யாயினும் அவரை நல்லறிவூட்டித் தெருட்டுவார் இவர். நம் பிள்ளையவர்களும் திவான் பஹ தூர் வி. கிருஷ்ணமாசாரியரவர்களும் நண்பர்களே யாயினும் மாறுபட்ட இடங்கள் பலவுள. இன்னும் இவர் தற்காலத் துப் பிறர் வன்மை கண்டு அழுக்காறடையும் புன்மக்கள் போலாது பிறரது பேராற்றல் கண்டுழி யெல்லாம் அன்னாரை வியந்தும் ஆதரித்தும் பரிசிலளித்தும் போற்றியும் கொண்டாடி யும் ஒழுகி வந்தவர். அந்தோ! இத்தகைய அன்புடைய யண்ணலை இழந்த தமிழ்வாணர் பெரிதும் கறவையிற் பிரிந்த கன்றெனக் கையற்று அயர்வார்கள் என்பதொருதலை.

## பட்டப் பேறு

நமது சென்னைத் துரைத்தனத்தார் எப்பொழுதும் யோக்கியதை கண்டுழி யெல்லாம் கவனித்துத் தக்க பட்ட மளித்து வருபவராதலின் நமது தாமோதரம் பிள்ளையவர் கட்கும் ருவ்பகதூர் என்ற பட்டத்தினை 1895-ஆம் வருடத் தில் அளித்தார்கள்; அஃதன்றியும் தமக்குத் தமிழ் மொழி யின்கண் ஐயப்பாடு நேர்ந்துழி யெல்லாம் அவரிடங் கேட்டுத் தெளிந்தனர். இவ்வாறு இவர் துரைத்தனத்தார்க்கேயன்றிப் பிறர்க்கும் நிகழ்ந்த ஐயங்களையும் அறுத்தனர். எனவே, இவர் வாய்மொழி பலர்க்கும் மேற்கோளாயின.

## இறுதிக் காலம்

இவரது தேக சௌக்கியம் 1888-ஆம் வருஷம் நிகழ்ந்த புத்திர சோகங் காரணமாகச் சிறிது சிறிதாகக் குறையத் தலைப் பட்டு இறுதியிற் சென்ற ஆறுமாதமாக மார்பு நோய் கண்டு வைத்திய நூல் வல்ல பலருதவி செய்துஞ் செவ்வைப்படாது

போயிற்று. ஆகவே நற்குணமும் நேரிய வாழ்க்கையு முடைய வரும், செந்தமிழ்ப் புலவரும், பல தமிழ் நூற் பதிப்பாசிரியரும் சென்னைச் சர்வ கலாசாலைப் பல்லாட்டைப் பரீட்சைக் கர்த்த ரும், தமிழ் வள்ளலாரும், சென்னைச் சர்வகலாசாலை யவயவி களுளொருவரும், நமது ஞானபோதினிப் பத்திரிகைக்குப் பேராதரவா யிருந்தவரும், பாவலர் நண்பரும், எம்மீது ஆர்வ முடையாரும், எம்மைத் திராவிட சாஸ்திரி யென்றழைப் பாரும் ஆகிய நமது தாமோதரம் பிள்ளையவர்கள் இவ்வுலகி னின்றும் நீங்கினர். இத்தகைய புலவர் கோமான் இறந்து பட்டார் என்பது தெரிந்த தமிழர் குழாம் இரங்குமாறு இற்றென எம்மாற் புனைதலியலாது. இவர் இறந்து பாடு தமிழுலகஞ் செய்த பாவமோ தேவர் தந்நயம்பற்றிச் செய்த கொடுமாயமோ? அறியேம்.

இனிக் காட்டகத்து மலர்ந்து மனிதர்க்கு இன்பம் பய வாது தாமே யழியும் மலர்கள்போலப் பல தமிழ் வித்துவான் கள் உலகில் வெளிப்போதராது காலஞ் சென்றனர்; அன்னார் கதி மிகவு மிரங்கத்தக்கதே. இவ்வாறன்றி நமது தாமோதரம் பிள்ளை யவர்கள் பல நூல்கள் அச்சிட்டும் சில நூல்க ளியற்றி யும் பலரோடளவளாவியு மிருந்து 'காலஞ் சென்றமையின் இவர் இறந்தும் இறவாதவரே யென்பது யாவரு முணர்ந் ததே.

காமோதி வண்டர் கடிமலர்த்தேன் கூட்டுதல்போ
ஞமோது செந்தமிழி னன்னூல் பலதொகுத்த
தாமோ தரம்பிள்ளை சால்பெடுத்துச் சாற்றவெவர்
தாமோ தரமுடையார் தண்டமிழ்ச்செந் நாப்புலவீர்.

சுபம்.

---

The B. N. Press, Educational Printers, Madras.

# செய்யுண் முதற்குறிப் பகராதி


| | | | |
|---|---|---|---|
| அருமறைக ணெறிகாட்ட | 2 | செப்பறைப் பதியின் | 52 |
| அன்றியுந் தென்றிசை | 41 | செல்வன் புதல்வன் | 17 |
| இந்நூற்குதாரணங் | 55 | சொன்ன சந்தக்கவி | 17 |
| இழையொன்றிரண்டு | 18 | தற்கோலிப்பூ | 22 |
| உம்பர்க் குரிய பிற | 43 | திக்குளெட்டுக்கயந் | 23 |
| ஊரும் பேரு | 52 | திகிரிவட்டக்குடைச் | 17 |
| எட்டெழுத்தைக்கருத் | 23 | திருநெல்வேலியெனுஞ் | 48 |
| என்கண் காணத் | 41 | நானேயினியுன்னை | 18 |
| என்னுலியன்றது | 54 | நூலார்கலைவல்ல | 22 |
| ஐம்பதின்மர் சங்கத்தார் | 31 | பங்கப்பழனத் | 24 |
| ஒரு முனிவ னேரியிலோ | 10 | புயல்வண்ணன் புனல் | 2 |
| கண்பொட்டையாயினு | 15 | பெரும்புங்கவர் புகழ் | 42 |
| கருப்பஞ் சிலையு | 62 | பேர்கொண்டு நின்றபிர | 46 |
| கல்லாடர் செய்பனுவற் | 48 | போதத் தமிழ்க்கும் | 33 |
| கனந்தந்தான் | 61 | மல்லிகையே வெண்சங்கா | 20 |
| *காமோதிவண்டர் | 72 | மாரிபோற் கொடுப்பினு | 54 |
| குட்டுதற்கோ பிள்ளை | 14 | மானவனுனந்த | 13 |
| கூடுஞ் சபையிற் | 31 | மானிற்குமோவிந்த | 12 |
| கூனையுங்குட | 15 | முற்காலத்துப் | 54 |
| கோக்கண்டு மன்னர் | 16 | மோனைமுத்தமிழ் | 15 |
| கோரத்துக் கொப்போ | 10 | விக்காவுக்கா | 21 |
| சந்தனப் பொதியச் | 9 | விண்பட்ட கொக்குவல் | 15 |
| சித்திதரு கிறவல்லி | 60 | வெண்பாவிற் புகழேந்தி | 8 |
| சீதள சந்த்ர | 46 | வெள்ளத்தடங்காச் | 24 |
| *செந்தமிழ் மொழிக்கலை | 9 | வேதியர் திலகன் | 32 |


*உடுக்குறியுற்றன ஆசிரியரியற்றியவை

